புத்திநாதன் திசாநாதனுக்கு :

க்ஷீண தவம் அடைந்து பாபகிரகங்களுடன் சேர்ந்திருந்தா புத்திரகளத்திர பீடை. விரோதம். ஸ்திரிகலகம், காரியபங் பசு. தனதான்ய நஷ்டம் உண்டாகும். புத்திநாதன் நீசமு வும், ஷஷ்டாஷ்டக வியத்தில் பாபகிரஹம் சம்பந்தம் பெ லும் ஜலகண்டம், மனஸ்தாபம். இடம் பெயர்தல். மா கண்டம் அல்கர்மம் அல்லது மாதுர்வகை பீடை ருணபீ உண்டாகும்.

புத்திநாதன் கேந்திரங்களிலும், கோணத்தி சுபருடன் சேர்ந்தாலும் பார்த்தாலும் களத்திரபுத்திர செ கியம். விவாஹ சுப காரியங்கள் புத்திரமித்திர செ கியம் உண்டாகும்.

புத்திநாதன் சப்தம ஸ்தானத்தில் மாரகாதிபதி சம்ப மாயிருந்தால் அமிருந்து தோஷம் வரும் இதற்கு பரிகா வெள்ளைபசுதானம் செய்யதீரும்.

சூரியதிசையில் அங்காரக புத்தி மீ 4-நாள் 6 பலன்

புத்திநாதன் இலக்கினத்திற்கு கேந்திரகோ உச்சஸ்வ க்ஷேத்திரங்களில் தனலாபம் 3-9 ல் இருந் பூமிலாபம் தனதான்ய விருத்தி நூதனகிரக நிர்மாணம் உ டாகும். புத்திநாதன் இலக்கினாதிபதியுடன் கூடினால் செ கியம் இராஜயோகம் உண்டாகும். அங்காரகன் திசாநா க்கு 6-8-12 ஸ்தானாதிபதியுடன் கூடினாலும் பார் அடைந்தாலும்: சத்துருபீதி: மனச்சிந்தை: ராஜதண் காராகிரஹபிரவேசம்: பிராதுர்வர்க்கம் விரோதம்: ருண டம். சோரம் இவைகள் ஏற்படும். 9-11 அதிபதியுடன் சே திருந்தால் தனலாபம் சத்துருநாசம் சௌபாக்கியம் பு கலியாணம் தர்சனம் தனதான்ய விருத்தியுண்டாகும்.

புந்திநாதன் 2-7ஸ்தானங்களில் பலவானாக பாப கிரஹ வீக்ஷிண்யம் பெற்றால் சுபமிருது தோஷம் உண்டாகும் இதற்கு பரிகாரம் சுப்பிரமணியர் அபிஷேகம் ஜபம் சுவர்ண விருஷபதானம் செய்ய விலகும்.

சூரியதிசையில் இராகுபுத்தி மீ 10 நாள் 24
இதற்கு பலன்

இலக்கினத்திற்கு கேந்திர கோணங்களில் இராகு இருந்தால் தனநாசம் சோரபீடை புத்திரரோக பீடை ஏற்படும் பிற்பாடு இந்த இராகு லக்கினத்திற்கு கேந்திர திரிகோணங்களி லிருந்தாலும் அந்த ஸ்தானத்தில் சுபர் இருந்தாலும் பார்வை இருந்தாலும். தேக ஆரோக்கியம்t மனச்சந்தோஷம் ராஜபிரீதி சுபங்களும் வீட்டில் உண்டாகும். புத்திநாதன் ஷஷ்டாஷ்டக வியாத்தில் பாபயுக்தனாகயிருந்தால் சோர பயம். குன்மவியாதி, அல்லது க்ஷயம் மரணபீடை விஷபயம் ஸ்தான சஞ்சலம் இவைகள் உண்டாகும் புத்திநாதன் துதீய சப்தமாதியுடன் கூடியாவது அந்த இடங்களில் இருந்து அவர்கள் வீக்ஷிண்யம் ஏற்பட்டாலும் அத்துய தோஷம் ஏற்படும், இதற்கு பரிகாரம்: ருத்திரஜபம் ஹோமம் ஆல்லது ஆடு அல்லது எருமை கிடாதானம் செய்ய விலகும்.

சூரியதிசையில் குருபுத்தி மீ 9 நாள் 18 இதற்குபலன்

இந்தகுரு. தசாநாதனுக்கு சுபாம்ஸங்களிலாவது சுபஸ்தானங்களிலாவது கேந்திராதிபத்திய தோஷங்களில்லாமல், கேந்திர கோணங்களில் பலவனாகயிருந்தால் பாக்கியம்-சுகம் பரோபகார சிந்தனை தேவதா பக்தி பிதுர்வர்க்க ஜனபிரியம் வியாபார உத்தியோகங்களின் மூலம் கீர்த்தி உண்டாகும்,

இந்த குரு தசாநாதனுக்கு 6, 8, 12 ஸ்தானங்களில் இருந்தாலும், நீச பகை ஸ்தானங்களில் சனி-செவ் ராகு இவர்களுடன் கூடினால் களத்திர புத்திர ஹானி தேகபீடை, மனக்லேசம், ராஜதண்டனை பந்து விரோதம் பிதுர்வர்க்கபீடை நாலுகால் ஜந்து நாசம் புத்திர விரோதம் உண்டாகும்.

இந்தகுரு 2, 7ம் வீட்டுக்கு அதிபதியாக இருந்த போதிலும் பாபகிரஹங்களால் பார்க்கப்பட்டால் தேக உபத்திரவம் தனம்விறயம் பந்துக்கள் பீடை உண்டாகும். இதற்கு பரிகாரம் ருத்திரஜபம் லக்ஷ்மிநாராயணபிரதிமை தானம் செய்ய விலகும்

### சூரியதிசையில் சனிபுத்தி மீ" 11 நாள் 12 இதற்கு பலன்

புத்திநாதன் திசாநாதனுக்கு கேந்திர கோணங்களில் இருந்தால் பயம். புத்திரசோகம், பிதுர் அரிஷ்டம் உண்டாகும். திசாநாதனுக்கு 8-8-12 ல் இருந்தால் பாபயுக்தனானால் புத்திரநாசம். இராஜபயம் மானபங்கம் காரியஹானி இராஜகோபம் அகாலபோஜனம் உண்டாகும். திசாநாதனுக்கு லாபத்தில் உச்சமித்துருஸ் தானங்களிலிருந்து சுபனானால் கலியாணம் உண்டாகும் புத்திநாதன் 2-7 க்கு உடையவனானால் அபமிருத்யுதோஷம் உண்டாகும் இதற்கு பரிகாரம் மிருத்துயு ஜபம் கருத்த எருமை தானம் கருப்பு கம்பளிதானம் செய்ய விலகும்.

### சூரியதிசையில் புதன்புத்தி மீ" 10 நாள் 6 க்கு பலன்

புத்திநாதன் இலக்கினத்திற்கு கேந்திரகோணங்கள் உச்சஸ்வக்ஷேத்திரங்களிலிருந்து சுபர்களுடன் கூடி

பந்தனம் இவைகள் உண்டாகும் 2-7க்குடையவனுடன் கூடி
ஞல் அல்லது அந்த ஸ்தானங்களிலிருந்தால் திரேக ஜாட்டி
யம் உண்டாகும் இதற்கு பரிகாரம் விஷ்ணு அர்ச்சனை, ஜபம்
தீபம் செய்ப சௌக்கியம் ஏற்படும்.

சூரிய திசையில் கேதுபுத்தி மாசம் 4 நாள் 6க்கு பலன்

தேகபீடை மனோவேதனை ராஜகோபம் அபவாதம் பந்து
மித்துரு உபத்திரவம் உண்டாம் இந்த கேதுஷஷ்டக வியத்
தில் பாபருடன் கூடினல் ஸ்தானபேதம் உடல் பல் வயிறு
இந்த இடங்களில் பாதையும் சத்துரு பீடை பிதுர்வர்க்கபீடை
ஏற்படும் இந்த கேது லக்கினத்திற்கு புத்திர ஸ்தானத்தில்
யோககாரகனுடன் சேர்ந்திருந்தாலும் சுபாம்சம் பெற்ருலும்
விட்டில் சுப காரியங்களும் களத்திர புத்திர சுகமும் உண்
டாகும்

இந்த கேது 2-7 ஸ்தானங்களில் மாரத கிரஹங்களுடன்
சேர்ந்தாலும் பார்க்கப்பட்டிலும் மிருதுபு பயம் ஏற்படும்
இதற்கு பரிகாரம் துர்க்கை ஜபம் தீபம் அர்ச்சனை செய்ய
விலகும்.

சூரிய திசையில் சுக்கிர புத்தி வருஷம் 1க்கு பலன்

புத்திரனதன் கேந்திர கோணங்களில் இருந்தாலும் உச்ச
ஸ்வக்ஷேத்திர மித்துரு க்ஷேத்திரங்களிலிருந்தாலும் பிரிய
முள்ள ஸ்திரி சம்போக சுகம் கிராம பயணம் பிராமணர்கள்
பிரியம் பெரியோர்களால் தெரிசனம் பூமிலாபம் தனதான்ய
விருத்தி வீட்டில் சுபகாரியம் இஷடான்ன போஜனம் விக்
குறிய லாபம் வியாபார லாபம் பந்துக்கள் சிநேகம் இவைகள்
உண்டாகுல் இந்த சுக்கிரன் இலக்கினத்திற்கு ஷஷடாஷடக
வியத்திலும் பாபகிரஹம் சத்துரு கிரகங்களுடன் கூடினாலும்
பார்வை பெற்ருலும் பந்து துவேஷசம் இராஜகோபம் பூமி
விக்கிரயம் அன்னிய கிரஹவாசம் இவைகள் உண்டாகும்
2-7 ஸ்தானங்களில் பலவானல் மாரக் கிரஹபார்வை
அடைந்தால் அம்மிருத்துயு தோஷம் ஏற்படும் இதற்கு பரிகா
ரம் மிருத்துயு ஜபம் வெள்ளாடு தானம் செய்ய விலகும்.

சந்திரதிசை 10 வருஷம்

பொதுபலன்:- மாதுர் சௌக்கியம் ஐஸ்வர்யம் சயனசுக நாற்கால் வாகனம் சுபகாரியம் உண்டாகும்.

# சந்திரதிசை 10 வருஷம்

சந்திரபுத்தி மாசம் 10க்கு பலன்

இந்த சந்திரன் ஸ்வக்ஷேத்திரம், கேந்திர, கோண ளில் சுயயுக்தனுய் சுபயீக்ஷண்யம் அடைந்தால் இராஜலா பயிர் அபிவிருத்தி தேவதா குருபக்தி பூமிவிருத்தி தனதா லாபம் உண்டாகும் இந்த சந்திரன் பாக்கிய ஸ்தான பூர்ண பலத்துடன் இருந்தால் ஸ்திரி சயனசுகம் இரா ஸ்நேகம் ஏற்படும்.

இந்த சந்திரன் 6 8, 12ல் இருந்தாலும் நீசனுக பாபயு னுக இருந்தாலும் மனவியாகூலம்சரீரபீடை கோபம் ஸ்தா பிரஷ்டம், தனபீடை. விறயம் பந்து மித்துரு மனஸ்தா மாதுருநாசம் மானஹானி களத்திர கர்ப்பதோஷம் மா சஞ்சலம் அரிஷடம் உண்டாகும்.

இந்த சந்திரன் 2 7ம் ஸ்தானுதியாயும் பாப கிரஹங் டன் துர்பலத்தை அடைந்திருந்தால் தேக பீடை ருண சாஸ்திர பயம் ஏற்படும்.

# சந்திர திசையில் சந்திரபுத்தி

இதற்கு பரிகாரம் மிருத்துயுஜபம்
வெள்ளைபசு தானம் செய்ய விலகும்

சந்திர திசையில் அங்காரகபுத்தி

மாசம் 7க்கு பலன்

இந்த அங்காரகன் இலக்கினத்திற்கு கேந்திர கோ களில் ஸ்வக்ஷேத்திரங்களிலிருந்தால் தேக ஆரோக் சௌபாக்கியம் வஸ்திர ஆபரணம் யத்திர காரியம் வடுவாசல் உண்டாகும் அங்காரகன் ஷஷ்டாஷ்ட வி களில் பாபயுக்தனுக யிருந்தால் அல்லது நீசத்தில் ச கோத்திரத்திலிருந்தால் சத்துருமங்கள் செய்த

அபகீர்த்தியும் நிஷ்டூரமும் உண்டாகும் 2ம் இடத்தில் இருந்தாய் தனவிறயம் ஏற்படும்

அங்காரகன் தசாநாதனுக்கு கேந்திர கோணங்களில் இலாபத்தில் பலவானாக இருப்பானானல் சௌபாக்கியம் ராஜசன்மானம் வஸ்தி ஆபரணம்லாபம் ஆரோக்கியம்யத்தினகாரியம் சித்திகிரஹநிர்மாணம் மிருத்துரு வம்சம் விருத்தியும் வண்டி மாடு விர்த்தியும் உண்டாகும்.

இந்த அங்காரகன் சந்திரனுக்குகேந்திரகோணங்களில் இருந்தாலும் உச்சம் சுபாம்சம் சுப சங்கமம் பெற்று பலவானாகயிருந்தால் சத்துருநாசம். வியாபாரலாபம் உத்தியோக சித்திகசித்திரபுத்திரபந்து சௌக்கியம் ஏற்படும். அங்காரகன் 6 8 12ல் நீசனாக யிருந்தாலும் பாபகிரஹ சம்பந்தம் அல்லது வீக்ஷண்யம் அடைந்தாலும் கிரஹ பூமி நாசம் ராஜாக்கள் விரோதம் காரியகெடுதி பிராத்துருவர்க்க பீடைதனவிறயம் துஷ்டசகவாசம் ஏற்படும்.

27ம் இடங்களிலிருந்தாலும் அல்லிது அந்தஸ்தானாதிபதியாக மாரக கிரகத்தோடு கூடினாலும் காரிய விக்னம் மனோவியாதி, துக்கம் உண்டாகும் இதற்கு பரிகாரம் சுப்பிரமணியருக்கு பூஜை அர்ச்சனைசெய்ய விலகும்

சந்திரதிசையில் குரு புத்தி
மாசம் 16 (14)க்கு பலன்

இந்த குரு ஸ்வக்ஷேத்திர உச்ச கேந்திரகோணமித்துரு ஸ்தானங்களிலாவது சுப கிரஹங்களுடன் சேர்ந்து பலவானாக இருந்தால் வஸ்திர ஆபரணங்கள் விக்கிர்ய லாபம் சுபகாரியங்கள் நடப்பதுகிரகபூமி பசு லாபங்களும் தேவாலய பிரதிஷ்டைகளும் தானதர்ம பரோபகாரமும் அபிவிர்த்தியும் தோட்டம்கிணறு நிர்மாணம் பிரபு பிராமண வியமாகனா காரியசித்தியும் பந்து பிரீதியத்தன காரியமுடிவும்புத்திரஉற்பத்தியும் பயிர் விருத்தியும் குருதரிசனமும் விஷ்ணு ஆலயதரிசனமும் உண்டாகும்.

சந்திர திசையில் குருபுத்தி

இந்த குரு ஷஷ்டாஷ்டகவிய நீசஸ்தானங்களி லாவது சத்துரு க்ஷேத்திரத்திலாவதுபாப கிரஹங்களுடன் கூடி துபலவானாக இருப்பானாகில் மனோ வியாதி பிதுர்வர்க்க பீடை புத்திர தோஷம் ஸ்தான சஞ்சலம்பந்துநாசம் அரசகோபம் மானபிராணஹானி அன்னிய இராம கஞ்சாரம்களத்திரதே ஜாட்டியும் உண்டாகும்.

இந்த குரு தசாநாதனுக்கு 1 47 10 5 6311 யூர் பலவானாக இருந்தால் அந்த பாவாதிகளின் பலனை அடை வான். வீட்டில்சுப காரியங்கள் தனசம்பத்துக்கள் தைரிய சரீர சௌக்கியம் ராஜலாபம் வியாபாரவிருத்திபந்துமித் ருக்கள் சிநேகம் வாஹன வஸ்திரலாபம் உண்டாகும்

குரு பலவீனனாய் பாபிகளுடன் சேர்ந்து ராகுவினு பார்க்கப்பட்டால் களத்திர தோஷம் வாதபித்த வியாதி பிது கிலேசம் உண்டாகும்:

குரு பலவீனனாய் பாபிகளுடள் சேர்ந்து ராகுவினு பார்க்கப்பட்டால் களத்திர தோஷம் வாதபித்த வியா பிதுர் கிலேசம் உண்டாகும்

2-7 ஸ்தானங்களில் இருப்பானாகில் அபத்துயு தோஷ உண்டாகும்.

இதற்கு பரிகாரம் சிவ சகஸ்ரநாமம் யிராயணம்செய் விலகும்.

சந்திரதிசையில் ராகுபுத்தி
வருஷம் 1 மாதம் 6 பவன்

இந்த இராகு சுப சம்பந்தமாய் இலக்கினாதிபதியுடன் கூடியாவது கேந்திர கோணத்திலாவது உச்சத்தில் இரு தால் புத்தி முதலில் சௌகரியமும் லாபமும் சத்துரு நாசமு மத்தியில் சோரபயமும் உடனே மற்றராசிகளில் இருக்க தா தான்ய விருத்தியும் பிரபு விருத்தியும் மேற்கு திக்கில் ஜயமு வாகன லாபமும் உண்டாகும்.

இந்த ராகு அங்காரகனுடன் கூடியிருந்தால் அ தத்தினால் பிராண ஹானி உண்டாகும். அஷ்டமாதியுட சம்பந்தம் உண்டானால் அரசுலாபம் கீர்த்தி தனலாபம் உ ாகும்

இந்த ராகு அங்காரகனுடன் கூடியிருந்தால் ஆயு தத்தினல் பிராண ஹானி உண்டாகும், அஷ்டமாதியுடன் சம்பந்தம் உண்டானுல் அரசுலாபம் கீர்த்தி தனலாபம் உண் டாகும்

திசாநாதனுக்கு கேந்திரத்தில் இருந்தாலும் முன் சொன் னபடி நடக்கும் ஷஷ்டாஷ்டக வியத்தில் பாபயுக்தனுகி இருந்தால் புத்திர களத்திர ஹானி கலகம் சுபமிருத்துயு வியாதி ஸ்தானப்ரஷ்டம் விஷ சந்து திருடர்கள் பயம் உண் டாகும்.

27ம் ஸ்தானங்களில் இருந்தாலும் அந்த அதி பதிகளின் சம்பந்தம் இருந்தாலும் பார்த்தாலும் அஷ்டமாதியுடன் சேர்ந் தாலும் சுபமிருத்துயு பீடை ஜ்வரம் இவைகள் உண்டாகும் இதற்கு பரிகாரம் ஆட்டு கிடாதனம் செய்ய விலகும்.

# சந்திர திசையில் சனிபுத்தி
# வருஷம் 1 மாசம்-7க்கு பலன்

இந்த சனி லககினத்திற்கும் கேந்ரதி கோணங்களிலிருந் தாலும் ஸ்வ, க்ஷேத்திர, மித்துருt உச்ச, லாப ராசியிலிந் தாலும் அற்ப சௌக்கியம் கொஞ்சலாபம் பந்து துவேஷம், கிஞ்சித் பயம் துக்கம், நாற்கால் பீடை, தேச சஞ்சாரம் வரும், இந்தசனி திசாநாதனுக்கு கேந்திர கோணங்களில் லாபத்துடன், உச்ச, ஸ்வ க்ஷேத்திரங்களில் 36, 11ல் இருந்தால் பூமி ல்ாபம். புத்திரலாபம் கிரஹகட்டுதலும் சுப சம்பந்த மான விஷயங்களும் இராஜசம்பாஷணையும் நினைத்த காரிய ஜயமும் கிராமாதிகாரம் பூமி சேர்க்கை ஏற்படும், ஷஷ்டாஷ்டகவியத்தில் நீச ராசியிலிருந்து சுபருடன் கூடினுல் சுப பலனை கொடுப்பான். பாபருடன் கூடினுல் நீச ஸ்திரி சேர்க்கை உண்டாகும். புத்திர தாரம், ரோகம், பிதா-மாதா ஹானி ஏற்படும் குன்ம வியாதியும் உண்டாகும். 2. 7 அதிபதிகளுடன் கூடினுல் வாதசுரம் தேகத்திற் பிணியும் உண்டாகும். இதற்கு பரிகாரம் எருமைக்கிடா தானம் எண்ணெய் தீபம் போடவும் விலகும்.

சந்திர திசையில் புதன் பத்தி ஹ 1 மீ 5 பலன்

இந்த புதன் கேந்திரகோணங்களில் ஸ்வக்ஷேத்தி களில் தனலாப. சுபஸ்தானங்களில் சுபர்களுடன் யிருந்தால் வீட்டில்கலியாணங்களும் பந்து தரிசனம் தியா விநோத சன்மானம் புத்திர உற்பத்தி கீர்த்தி வி பாரமூலம் தனலாபம் ரத்தின பூஷண விக்கிரயம் லா சத்துரு நாசம் காரியானு கூலம் புண்ணிய கதைகள் கே பதும் அன்னிய கிராம பிரயாணம் ஏற்படும். இந்த புத ஷஷ்டாஷ்டக வியத்தில் இருந்தாலும் நீசத்திலிருந்தா அஷ்டமத்தில் பாபர்களுடன் கூடினலும். பார்த்தா தேகபிணி இராஜபயம் பிராணசங்கடம் உண்டாகும். இ கினதிபதியுடன் கூடினல் வந்தவுடன் சௌபாக்கியம் வியலாபம் இராஜபிரீதி ஏற்படும், திசானதனுக்கு கேந் கோணங்களில் லாபத்தில் இருந்தால் தானதருமம் நடக் ஷஷ்டாஷ்டக வியத்திலிருந்தால் நோய் பிணியுண்டா 2. 7 ம் அதிபதிகளுட்ன் கூடியிருந்தால் அபத்யு டே ஷம் வரும். இதற்கு பரிகாரம் விஷ்ணுஜபம் தீபம் அர்ச்ச செய்ப விலகும்.

சந்திரதிசையில் கேதுபுத்தி மாசம் 7 க்கு பலன்

இந்த கேது கேந்திரகோணங்களில் சுபருடன் கூடி அல்லது இலக்கினதிபதியுடன் கூடி உச்சத்தில் சுப திரு பெற்றிருந்தாலும் கலியாண சம்பத்து விவசாயம் கூ இந்த தானங்களில் பாபயுக்தனக இருந்தால் சூன்யரோ பீடை சண்டை வீண்வல்காரம் ஏற்படும். 2 7ம் அதிபதி களுடன் சனியும் கூடினல் மரண முண்டாகும் இத பரிகாரம் வெள்ளிநாகர் செய்து தானம்செய்ய விலகும்.

சந்திரதிசையில் சுக்கிரபுத்தி ஹ 1 மீ க்கு பலன்

இந்த சுக்கிரன் இலக்கினத்திற்கு கேந்திர கோண களில் பலன் அடைந்து இருந்தால் இராஜ்யலாபம் கிடை டும். 2-4-7 லிருந்தாலும் அல்லது இவர் களுடன் கூடி டும் பூஷணங்கள் உண்டாகும் புதை யல்கள் வாகனம் ஏற்படும். இஷடானன் போஜனம் நூதன வஸ்திரம் சு

புஷ்பாலங்கார தனமான பஞ்சணையின் பேரில் படுக்கையும் மனதிறிஷடமான ஸ்திரிசங்கம் ஏற்படும்: திசானுதனுடன் கூடினால் இராச்சிய அதிகாரம் செய்வான். கிரஹத்தில் சுப காரியங்கள் நடக்கும் மாதுர்பிதுர் சௌக்கியம் உண்டாகும் சுக்கிரன் நீசனாய் பாபயுக்தனாகயிருந்து அங்காரகன் பார்வை பெற்றால் பூமிநாசம், அலைச்சல் பெண்சாதி விசனம்இராஜ-நிஷடூரம் இவைகளுண்டாகும். சுக்கிரன் திசானுதனுக்கு கேந்திர கோணங்களில் தனலாபத்திலிருப்பதால் இராஜ பிரீதி தன்னுடைய ஸ்திரியால் அதிக கீர்த்தியும் சுகமும் வரும். வீடுவாசல் விருத்தி ஏற்படும். நாற்கால் ஜீவனம் விவசாயம் தன தான்ய விருத்தி பிராமண போஜனம் முதலான நற்காரியங்கள் உண்டாகும் சுக்கிரன் திசானு னுக்கு ஷஷ்டாஷடக வியத்தில் பாபயுக்தனாக இருந்தால் கலகம் பந்துதுவேஷம் பரஸ்திரி போகம் சத்துருபயம் ரத் துருவிருத்தி களததிரபுத்திர ஹானி அன்னிய தேசவாசம் இராஜகோபம் உண்டாகும் 2-7 அதிபதியுடன் கூடினால் அபமிருத்துயு தோஷம் வரும். இதற்கு பரிகாரம்:- ருத்திர ஜபம் வெள்ளி தானம் செய்யவிலகும்.

சந்திர திசையில் சூரியபுத்தி மாசம் 6-க்கு பலன்

இந்த சூரியன் கேந்திரகோண உச்சஸ்வ க்ஷேத்திர மித்துரு ஸ்தானங்களில் சுப கிரகங்களுடன் கூடினாலும் இருந்தாலும் இராஜ்யபயம் பூமிலாபம் தன பிராப்தி வீட்டில் சுபகாரியம் புறிதிர உற்பத்தி அதிகார விர்த்தி பந்துபிரீதி வியாபார உத்தியோகவிர்த்தி குரு தேவதா புண்ணிய க்ஷேத்திர தெரிசனம் களத்திர சௌக்கியம் உண்டாகும். இந்த சூரியன் 6-8-12 ஸ்தானங்களில் நீசனாக சத்துரு ராசியிலாவது பாப கிரஹ சம்பந்தம் ஏற்பட்டு இருந்தால் புத்தி மாராட்டம் சத்துருபயம் காரியவிக்கினம் கடன்காரர் கள் உபாதியும் விக்கிரிய நஷ்டம் வெளியூர் பிரயாணங்களில் தனம் நஷ்டமும் உண்டாகும். 2-7 ஸ்தானங்களுக்கு

அதிபதிகளாக இருந்தாலும் மாரக கிரஹத்துடன் கூடியிரு
வாதபித்த ஜ்வரம் பீடையும் ஏற்படும் இதற்கு பரிகார
சிவபூஜை ஸ்வர்ண விக்கிரஹ தானம் செய்தால் ஆ
ஆரோக்கியம் ஆயுள் விர்த்தி ஏற்படும்,

செவ்வாய்திசை 7 வருஷம் செவ்வாய் திசையில்
அங்கரரகபுத்தி மாசம் 4 நாள் 27-க்கு பலன்

இந்த அங்காரகன் இலக்கினுதிபதியுடன் கூடி கேந்
கோணத்தில் இருந்தால் கொஞ்சம் சௌக்கியம் சந்தோஷ
லக்ஷிமி கடாக்ஷம் புத்திர உற்பத்தியும் வீட்டில் சுபகாரி
பசுவிருத்தி பந்துமித்துரு சிநேகம் உண்டாகும். ஸ்வக்ஷே
திர உச்சனுக சுய புத்தினுக சுபதிருஷ்டி பெற்றிருந்த
அர்த்த லாபம் நஷ்டமான பூமி கிரகங்களும் பால் பசு
தான்ய விருத்தியுண்டாகும், அங்காரகன் நீசன் ஷஷ்டா
டக விராசிகளில் பாப கிரஹங்களுடன் கூடியிருப்பானு
பாபகாரியம் செய்வதிலும் ரணபாதைசோராக்கனி ஆயு
கள்ால் ரணங்களும் உண்டாகும் கடன் பாதையும் மான
கமும் ஏற்படும். அங்காரகன் 2-7 ஸ்தானங்களில் மாரக
பதியுடன் கூடியிருக்கும் பக்ஷத்தில் பிராணுட்பத்தான ரா
தண்டனை பயமும் உண்டாகும் இதற்குப் பரிகாரம்
சுப்பிரமணியர் பூஜை ஜபம் அர்ச்சனை உபவாசம் செய்
விலகும்.

அங்காரக திசையில் இராகுபுத்தி
வருஷம் 1 நாள் 18 இதற்கு' பலன்

இந்த ராகு சுப கிரஹங்களுடன் கூடி கேந்திர கோண
களில் பலவானுக இருந்தபோதிலும் உச்சனுக இருந்தபோ
லும் லாபம் களத்திரபிராப்தி புத்திர உற்பத்தி விவசா
விருத்தி சேது ஸ்னானபிராப்தி விவகாரஜயம் சத்துருநாச
பந்துமித்துரு பெரியோர்கள் தெரிசனம் சிநேகம் இவைக
உண்டாகும். இதற்குப் பரிகாரம் :- ஷஷ்டாஷ்டக வி
தில் நீச சத்துரு ராசியில் பாப கிரகங்களோடு சேர்ந்
இருந்தாலும் பார்க்கப்பட்டாலும் ராஜசோர நீச ஜனவிரே

தம் காரிய ஹானிவிஷ சஸ்திர பீடைகள் ஸ்திரி கலகம் ராக்கிரஹ வாசம் களத்திர விரோதம் இடமாறுதல் உண் டாகும் இந்த இராகு லககினத்திற்கு மாராகாதிபதி கூடினு லும் பார்க்கப்பட்டாலும் அபமிருத்தும் தோஷம் ஏற்படும் இதற்கு பரிகாரம்:- மிருத்துயு ஜபம் வெள்ளிநாகர் தானம் பூஜை செய்ய விலகும்

அங்காரக திசையில் குரு புக்தி மீ" 11-நாள் 6க்கு பலன்

இந்த குரு லக்கின கேந்திர கோண ஸ்தானங்களில் திசாதனுடன் சேர்ந்தாவது அல்லது பார்வை பெற்ருவது இருந்தால் விவசாயம் பசு தானதான்ய சம்பத்துடன் இராஜா க்களால் பூசிக்கப்பட்டு நினைத்த காரியம் கைகூடுதலும் வீட் டில் கலியாண வைபவுங்களும் களத்திர புத்திர சௌக்கியம் உத்தியோக பிரயத்தனமும் கிரஹ நிர்மாணம் ஏற்படும் குரு ஷஷ்டாஷ்க வியத்தி[ பாபயுக்தனுக பாப] திருஷ்டியுடன் இருந்தால் சத்துரு பயமும் ஸ்தானபிரஷ்டம் பந்துநாசம் சாவு வார்த்தை கேள்வி இவைகள் உண்டாகும் குரு 2-7 அதிபதி களுடன் கூடினுல் மிருத்தியு தோஷம் தனவிறயம் ஏற்படும் இதற்குப் பரிகாரம்:- விஷ்ணு சஹஸ்ரநாமம் ஜபம் செய்ய விலகும்

அங்காரக திசையில் சனிபுத்தி வருஷம் 1
மீ" 1 நாள் 9 க்கு பலன்

இந்த சனி கேந்திர கோணங்களில் ஸ்வக்ஷேத்திரத் தில் அம்சையில் உச்சத்திருந்து சுபக்கிரஹங்களுடன் கூடினு லும் அல்லது பார்வை பெற்ருலும் களத்திர புத்திர சுகமும் வீட்டில் சுபகாரியமும் வியாபார உத்தியோக பிராப்தியும் தனலாபம் கீர்த்தி ராஜசன்மானம் தேக ஆரோக்கியம் சத்துரு ஜயம் கிரஹ நிர்மாணம் வண்டி மாடு ஆடு விக்கிறய லாபம் ஏற் படும். சனி திசையில் சனிவாரத்தில் இராஜபீதி சம்பத்துண்டாகும். இந்த சனி ஷஷ்டாஷ்டக விய ஸ்தா னங்களிலாவது பாபகிரஹங்களுடன் சேர்ந்திருப்பானுகில் துலுக்கர்முதலிய நீச்ச சகவாசம் கலகம் உண்டாகும் வாத

பித்தசுரம் இடம் மாறுதல் சோரபய பீடை உண்டாகும் இந்த சனி 2-7 ம் இடங்களில் பாபயுக்தனுக இருந்தால் ஜீவ ஹானி ரோகம் சத்துருநாசம். புத்திர பீடை, கைகால் நோய் கள். மாதுர்பீடை உண்டாகும் இதற்கு பரிகாரம் மிருத்யு ஜபம் எள் எண்ணெய் சனிக்கு தீபம் போடவும்.

அங்காரக திசையில் புதன்புத்தி
மீ 11 நாள் 27க்கு பலன்

இந்த புதன் கேந்திர கோணங்களிலிருந்தால் தருமபுத்தி கீர்த்தி நீதி நன்னடத்தை இஷ்டான்ன போஜனம் வாகன பூஷணம் பசுலாபம் உண்டாகும் புதன் திசாநாதனுடன் கூடி ஞல் சத்துரு விருத்தி பயம் கலகம் ஏற்படும் புதன் 2, 7 அதி பதியுடன் கூடினால் வாதஸ்வேஷமாகி ரோகம் பீடை அப மிருத்துயு தோஷம் வரும் இதற்கு பரிகாரம் விஷ்ணு ஜபம் பண்ண நிவர்த்தியாகும்

அங்காரக திசையில் கேது புத்தி
மீ 4 நாள் 27கக்கு பலன்

இந்த கேது கேந்திர கோணங்களில் சுய க்ஷேத்திரமு சுபருடன் கூடினுலும் அற்ப சௌக்கியம் அற்ப பலன் லாபம் விதவாஸ்திரி சங்கமம் களத்திர கலகம் அல்லது களத்திர வியாதி உண்டாகும் இந்த கேது 8 1 2 ஸ்தானங்களில் பாப கிரகங்களோடு கூடினுலும் பார்க்கப்பட்டாலும் மாதா பிதா களுக்கு அரிஷ்ம்மும் தந்த ரோகங்களுக்கு பீடையும் சர்ப தோஷம் விஷ சம்பந்தம் பயம் வெள்ளை குஷ்ட வியாதி களத்திரதோஷமாவது ராஜ ஜனவிரோதம் உண்டாகும் இந்த கேது 2-7 ஸ்தானங்களில் பாபகிரஹம் அல்லது மாரக கிரஹங்களுகின் சேர்ந்தாவது பார்த்தாவது இருந்தால் அப மிருத்யு தோஷம் ஏற்படும் இதற்கு பரிகாரம்:- ஆட்டுக்கடா தானம் செய்ய பரிகாரம் ஏற்படும்

அங்காரக திசையில் சுக்கிரபுத்தி வரு 1 மீ 2 பலன்

இந்த சுக்கிரன் கேந்திர கோண உச்ச கேந்திர மித்ர ஸ்தானங்களில் சுபகிரஹ சேர்க்கை பார்வை அடைந்திருக் க்கில் பூமிலாபம் பந்து சன்மானம் தேவதா தெரிசனம் உண் டாகும் லக்கினுதிபதியோடு சேர்ந்து இருப்பானுகில் கலியா

காரியங்கள் களட்திரபிராப்தி வியாபாரலாபம் ஸ்திரி சௌக்கியம் உண்டாகும் சுக்கிரன் திசாநாதனுக்கு கேந்திர கோணங்களில் இருந்தாலும் இதே பலன் இந்த சுக்கிரன் ஷஷ்டாஷ்டக வியத்தில் இருந்தாலும் நீசனுக பாபகிரஹ சம்பந்தம் ஏற்பட்டாகும் ராஜ தண்டனை காரியவிக்கினம் தனவிறயம் ஏற்படும் சுக்கிரன் 2-7ம் ஸ்தானங்களுக்கு அதிபதியாக மாரக கிரஹத்துடன் இருக்கும் பக்ஷத்தில் தேக ஜாட்டியம் வியாதி உண்டாகும் இதற்கு பரிகாரம் துர்க்கை ஜபம் வெள்ளெருமை தானம் செய்ய விலகும்

அங்காரகன் திசையில் சூரியபுத்தி மீ 4 நாள் 6 பலன்

இந்த சூரியன் கேந்திர கோண ஸ்வ க்ஷேத்திரங்களிலிருந்தாலும் திசாநாதனுக்கு அப்படியேயிருந்தாளம் லக்கினாதிபதியுடன் கூடினலும் தனதான்ய விருத்தி மனதுசந்தோஷம் வஸ்திர பூஷண லாபம் முதலியது ஏற்படும் மத்தியில் சௌக்கியம் அந்தியில் விசனமும் ஏற்படும் சூரியன் திசாநாதனுககு கெட்ட ஸ்தானங்களில் பலஹின கிரஹங்களுடன் சேர்ந்து இருந்தாலும் அல்லது பார்வை பெற்றுலும் 8-7 ஸ்தானாதிகளுடன் கூடினலும் எத்தன காரியங்கள் கெடும் பயம் ரோகம் வரும் இதற்கு பரிகாரம் சூரிய பிரிதி நமஸ்காரம் ஜபம் செய்ய விலகும்

அங்காரக திசையில் சந்திரபுத்தி மாதம் 7க்கு பலன்

இந்த ராகு லக்கினத்திற்கு ஸ்வ க்ஷேத்திர உச்ச மூல திரிகோண லாப ஸ்தானங்களில் சுய பக்தனயிருந்தால் வீடு வாசல் இலக்ஷிமி கடாக்ஷம் வீட்டில் கலியாணம் சம்பந்தம் சுயஅகார விர்த்தியும் தென் மேற்கு பிரயாணங்களில் காரியானுகூலங்களும் ராஜசன் மானம் ஜனபிரியம் உண்டாகும் மேலும் தைரியம் சுபகாரிய ஜயங்களும் ஏற்படும், இந்த ராகு ஷஷ்டாஷ்டக விய ஸ்தானங்களில் பாப கிரஹங்களுடன் சேர்ந்து பாபிகளினலே பார்க்கப்பட்டு இருந்தாலும் நீசம் நீசராசியில் பாப கிரஹங்களுடன் கூடியிருந்தாலும் சோரபாதை ருண தன பீடை இடம் விட்டு இடம் மாறுதலும் மனேவியாகூலம் பந்தனதிகஷ்டங்களும் மானபங்கம் களத்திர கலகமும் அல்லது களத்திர நாசம் வாதசிலேஷ்ம பீடை

ரோகம் வியாபாரங்களில் தனவிரயம் அன்னிய தேசசஞ்சாரம் சகோதரகலகம் உண்டாகும். 2-7ம் ஸ்தானங்களில் ராகு இருந்தாலும் கேந்திர கோணங்களிலிருந்தாலும் மிருத்துயு தோஷம் மாதுருநாசம் புத்திரவர்க்க ஜன அரிஷ்டம் ஸர்ப்ப ஜந்து பயம் ஏற்படும். இதற்கு பரிகாரம்:- வெள்ளி நாகர் தானம் பூஜை துர்க்காஜபம் செய்ய விலகும்.

இராகு திசையில் குருபுத்தி ௵ 2 மாசம் 4 நாள் 24

இந்தகுரு லக்கினத்திலிருந்து கேந்திர கோணங்களிலும் ஸ்வ க்ஷேத்திர உச்ச மித்துரு ஸ்வாம்சங்களில் சுபர்களுடன் கூடி பலவானாக இருந்தால் பூமி லாபம் விவாக சுபசோபனாதிகள் வீட்டில் நடக்கும் மேற்கு திசையில் பிரயாணமும் பந்து தெரிசனம் பிரயத்தனகாரியம் சித்தியும் புண்ணிய க்ஷேத்திர வாசம் களத்திர புத்திர சௌக்கியம் உண்டாகும். இந்த குரு திசானாதனுக்கு துர் ஸ்தானங்களில் நீச சத்துரு ஸ்தானங்களில் இருந்தாலும் ஷஷ்டாஷ்டக வியத்தில் சத்துரு கிரகங்களுடன் கூடியிருந்தாலும் பார்வையடைந்தாலும் காரியவிக்கினம் அவமானம் களத்திர புத்திரதோஷம் மனோவியாதி ஜேஷ்ட பிராதுரு ஜனங்களுக்கு அரிஷ்டம் மாதுரு பித்துரு வியோதிக துக்கங்களும் தனவிரயம் உண்டாகும் இந்த குரு 2-7 ஸ்தானாதிபதியையும் பாப கிரகங்களுடன் சேர்ந்து பார்வை அடைந்தாலும் அபமிருத்துயு தோஷமுண்டாகும். சுரம்வரும் இதற்கு பரிகாரம்:- சிவபூஜை சுவர்ண லிங்கதானம் செய்ய விலகும்.

இராகு திசையில் சனிபுத்தி ௵ 2 மீ 10
நாள் 6 க்கு பலன்

இந்த சனிபகவான் கேந்திர கோண 11, 3ம் ஸ்தானங்களிலாவது சுபாம்ச சுப க்ஷேத்திரங்களிலாவது திசானாதனுக்கு. கேந்திர கோணங்களிலாவது இருப்பானாகில் வாகன பிராப்தி ராஜப்ரீதி வியாபார லாபம் சுப காரியங்கள் மேற்கு தென்மேற்கு திசையில் பிரயாணங்களும் தனலாபம் நீசவஸ்து வியாபாரம் உண்டாகும். இந்த சனி ஷஷ்டாஷ்டக ஸ்தானங்களிலிருந்தாலும் திசானாதனுக்கு 6. 8. 12ல் பாப கிரகங்களுடன் கூடியிருந்தாலும் பார்க்கப்பட்டிருந்தாலும்

களத்திர புத்திர தோஷம் விவகார காரியவிக்னம் தாயாதி ஜனங்கள் விரோதம் பயிர் நஷ்டம் மாதாபிதுரு ஜன அரிஷ்டம் ராஜகோபம் ஸ்தானபிரஷ்டம் அக்கினி ரணபீடையுப கேழ்ங்காத கலகம் பிராணவார்த்தையுண்டாகும் இந்த சனி 2-7-ம் ஸ்தானங்களில் மாரக கிரஹத்தோடு கூட ஆதிபத்தியம் அடைந்து பாபகிரஹங்களால் பார்க்கப் பட்டால் புத்தர ஹானி அபமிருத்துயு தோஷம் உண்டாகும். இதற்கு பரிகாரம்:-விஷ்ணு சஹஸ்ரநாமம் பாராயணம் ஸ்வர்ணவிஷ்ணு பிரதிமை தானம் செய்ய சுகம் உண்டாகும்.

## இராகு திசையில் புதன்புத்தி வரு 2 மீ 6 நாள் 18க்கு பலன்

இந்த புதன் ஸ்வ க்ஷேத்திர கோணம் கேந்திரங்களில் இருந்தால் வியாபார லாபம் வித்தியா லாபம் சுபசோபனாதிகள் வீட்டில் நடக்கும், இந்த புதன் திசானாதனுக்கு கேந்திர கோணங்களில் லாபத்தில் ஸ்வ க்ஷேத்திரத்திலும் இருந்தால் இஷ்டான்ன போஜனம் பூஷ்ணலிங்கம் வாகனம் விவசாய விருத்தி சுபசோபனம் கூபகிணறு ஏற்படுத்துவதும் கிராமம் பூமி வாங்குவதும் ஏற்படும். புதன் திசானாதனுக்கு 6. 8. 12ல் பாபயுக்தனாக இருந்தாலும் சனி சூரியனுடன் கூடியிருந்தாலும் பார்க்கப் பட்டாலும் கலகம் துக்கம் சோரபயம் தேக ஜாட்டியம் உண்டாகும் புதன் 2-7ம் அதிபதியுடன் கூடி பாபயுக்தனாகயிருந்தால் அபமிருத்துயு தோஷம் உண்டாகும், இதற்கு பரிகாரம்:-விஷ்ணுஜபம் அர்ச்சனை செய்தால் பரிகாரம் ஏற்படும்

## இராகுதிசையில் கேதுபுத்தி வரு 1 மீ 0. நாள் 18-க்கு பலன்

இந்தகேது ஷஷ்டாஷ்டக வியத்தில் இருந்தால் மரணம் சம்பவிக்கும் இந்தகேது கேந்திரதிரிகோணங்களில் அந்தந்த பாவாதிபதிகளோடு கூடினால் சுபமாகில் சுபமும் அசுபமானால் அசுபமும் ஏற்படும். இந்த கேது 2-7ம் ஸ்தானங்களில் மாரக கிரகத்துடன் கூடினால் சிரசு தந்தகர்ணபீடை ரோகம் உண்டாகும் இதற்கு பரிகாரம் மிருத்துயுஜபம் செய்ப உத்தமம்.

## இராகு திசையில் சுக்கிரபுத்தி வருஷம் 3 பலன்

இந்த சுக்கிரன் கேத்திர கோண லாபத்திலிருந் பிராமணர் மூலமாக தனபிராப்தியும் புத்திர சௌக்கி இராஜயோக பலனும் உச்சனுக இருந்தாலும் ஸ்வக்ஷே ரத்திலிருந்தாலும் வாகன லாபம் புத்திர களத்திர சௌ யம் உண்டாகும். சுக்கிரன் திசாநாதனுக்கு கேந்திர கோண தில் லாபத்தில் சுபருடன் கூடினுல் நூதன கிரஹலாபம் சிநேகி தர்கள் புத்திரலாபம் வாகன சௌக்கியம் கள போக பாக்கியம் நினைத்தகாரியம் ஜயம்மேற்கு திசை பிரயாணம் ஏற்படும்.

இந்தசுக்கிரன் லக்கினத்துக்கும் திசாநாதனுக் ஷஷ்டாஷ்டக, வியத்தில், பாபயுக்தநாகயிருந்தாலும் கிரஹசேர்க்கை பார்வையிருந்தாலும் பிரபுக்களினுல், டம் இராஜபீடைவிஷபீடை, குன்ம வியாதி அகால ஜனம் தனச்சேதம்-பொருள் நஷ்டம் உண்டாகும்

சுக்கிரன் 27ம் அதிபதிகளுடன் கூடினுல் அபமிருத் தோஷம் ஏற்படும் இதற்குபரிகாரம் துர்க்கை, அன்னத அம்பிகை பூஜை செய்யவிலகும்.

## இராகு திசையில் சூரியபுத்தி மாசம் 10 நாள் 24. இதற்கு பலன்

இந்த சூரியன் கேந்திரசுய க்ஷேத்திர உச்ச திரு லாபஸ்தானங்களில் சுபர்களுடன் கூடியிருந்தால் சுப சுபர்களுடன் கூடினுலும் திசாநாதனுக்கு கேந்திர கோ களிருந்தாலும் அல்பகிமாதி காரம் தனதான்ய விருத் வாகன வஸ்திரபூஷணம் புத்திரகலியாணம் சத்துரு பிதுர் சௌக்கியம் உண்டாகும்.

இந்தசூரியன் ஷஷ்டாஷ்டக வியஸ்தானங் நீசஸ்தானங்களில் பாபர்களுடன் கூடினுலும் பா அடைந்தாலும் ஜ்வர அதிசார:ரோகம் ராஜ சோரம் அ பீடை எற்படும்.

இந்தசூரியன் லக்கினத்திற்கு 27ம் ஸ்தானங் பாபகிரஹங்களுடன் இருக்கும் பக்ஷத்தில்தேஹ சா

உண்டாகும். இதற்குபரிகாரம் சூரியநமஸ்காரம் ஜபம் செய்ய சுகம் உண்டாகும்

## இராகுதிசையில் சந்திரபுத்தி

## வருஷம் 1 மாசம் 6 இதற்கு பலன்

இந்தசந்திரன் கேந்திர கோணங்கள்ஸ்வக்ஷேத் திரம் மித்துரு க்ஷேத்திரம் லாபத்தில் சுபாம்சம், சுப வர்க்கம் பெற்று குருவுடன் கூடினாலும் பார்க்கப்பட்டாலும் பூர்ணசந்திரனாக இருந்தாலும் இராஜ சன்மானம் பூமிலாபம் லக்ஷ்மிகடாக்ஷந் கிரஹங்களில் சுப காரியங்களும் வாகன விக்கிரிய லபாம் கிர காரிய சித்தியும் தன தான்ய லாபம் விவசாய பலிதம் தன பூஷண விக்கிரிய லாபம்.

சத்கீர்த்தி சத்துரு ஜபம் பசு விருத்தி பந்து மித்துரு சகாயம் ஏற்படும்.

இந்த சந்திரன் ஷஷ்டாஷ்டக வியத்தில் நீசத்தில் இருந்தாலும் திசானாதனுக்கு 6 8 12ல் பாபயுக்தனாக இருந்து பாபர்களால் பார்க்கப்பட்டாலும் எத்தன காரியம் விக்கனம் சோரம் அக்கினி பயம் ஜ்வரம் அகஸ்மாத் கலகம் மனோதுக்கம் பந்து மித்துரு ஜனபீடை உண்டாகும்.

இந்த சந்திரன் 27ம் ஸ்தானங்களில் மாரக கிரஹத்துடன் இருந்தாலும் கூடினாலும் சீதஜ்வரம் அபமிருத்யு தோஷம் உண்டாகும்,

இதற்கு பரிகாரம் துர்க்கை பூஜை அம்பிகை ஸ்தோத்திரம் சந்திரன் பூஜைசெய்ய விலகும்

## இராகு திசையில் அங்காரக புத்தி வரு 1-0

## நாள் 18-க்கு பலன்

இந்த அங்காரகன் கேந்திர கோணங்களில் ஸ்வ க்ஷேத்திர லாபங்களில் சுபருடன் கூடினால் சுபசோபனம் களத்திர புத்திரர் சௌக்கியம் உண்டாகும் இந்த செவ்வாய் பாபயுக்தனாக 6. 8. 12-ல் இருந்தாலும் திசானாதனுக்கு ஷஷ்டாஷ்டக வியத்தில் நீசனாக பாபர்களுடன் கூடினாலும் பார்க்கப்பட்டாலும் தாரபுத்திரன் சகோதரன் இவர்களுக்கு ஹானியும் ஆயுதத்தினால் தேகத்திற்கு பீடையும் வரும் அங்காரகன்

2 7ம் அதிபதியாக இருந்து பாபகிரஹங்களுடன் கூடின் பந்துஜன மரணம் வாதஜ்வரம் ஏற்படும். இதற்கு பரிகாரம் சுப்பிரமணியனுக்கும் ராகுவுக்கும் பரிகாரம் தீபம் அர்ச்சனை செய்ய விலகும்.

## குருதிசை 16க்கு பலன்

### குருதிசையில் குருபுத்தி வருஷம் 2 மாதம் 1 நாள் 18க்கு பலன்

இந்த குரு ஸ்வ க்ஷேத்திரகோணத்திலிருந்தால் இராஜ்ய லாபம் உண்டாகும், குரு லாபாதிகளுடன் கூடினால் தன தான்ய லாபம் பிராமண சகவாச முண்டாகும் குருநீசத்தில் ஷஷ்டாஷ்டக வியத்தில் இருந்தால் முதலில் ராஜபய சத்துருபயம் தாயாதி ஜனங்களுக்குள் த்வேஷம் கலகம் வரும் குரு 2-7 அதிபதி களுடன் கூடினால் அபமிருத்யு தோஷம் உண்டாகும், இதற்கு பரிகாரம் ருத்திரஜபம் குரு அர்ச்சனை செய்ய தீரும்.

### குரு திசையில் சனிபுத்தி ஹ 2 மீ 6 நாள் 12 பலன்

இத்தசனி ஸ்வக்ஷேத்திரத்தில் மித்துரு ஸ்தானங்களி லாவது. கேந்திரகோணங்கிலாவது சுபவாக்க சுபாம்சங்களி லாவது. சுபர்களுடன் கூடியிருக்கும் பக்ஷத்தில் ராஜ்யலாப சௌக்கியம் தனதான்யவஸ்திரலாபம் அன்னிய நீச திரிசிநேகம் நீசவியாபாரம் கிரஹ பசுநிலம்லாபமும் புத்திர உற்பத்தியும் கிரஹத்திற் சுபகாரியம் நீசஜன சிநேகம் மேற்கு திக்கில் பிரயாணம் போனவிடத்தில் இராஜ தரி சனம் உண்டாகும்.

இந்த சனி லக்கினத்திற்காகிலும் திசாநாதனுக் காகிலு ஷஷ்டாஷ்டக வியத்தில் பாபயுக்தனுகபாப கிரஹங்களுடன் சம்பந்தம் பெற்றால் சகல காரியங்களுக்கு ஹானியும் மாதா பிதுர்புத்திரர்கள் களத்திரன் இவர்கள் ஹானியும் தேக ஜாட்டியும் ராஜ தண்டனையும் சோராக்கினி பீடையும் தன விறயமும் மானஹானியும் சக காரிய விக்கினம் பந்து துவேசம் உண்டாகும்.

இந்த சனி 2 7 ஸ்தானாதிபதியாக இருந்தாலும் கூடினா லும் ஜ்வரம் அபமிருத்து துவேஷம் உண்டாகும் இதற்கு பரிகாரம் விஷ்ணு சகஸ்ரநாமம் பிரம்ம போஜனம் சனி தீபம் அர்ச்சனை செய்ய விலகும்.

குருதிசையில் புதன்புத்தி
வருஷம் 2 மீ 3 நாள் 6
இதற்கு பலன்

இந்த புதன் ஸ்வக்ஷேத்திர கோணதன லாபத் திலிருந் தாலும் திசாதிபதியோடு கூடினாலும் சுபவர்க்க சுபாம்சங்களி லிருக்கும் பக்ஷத்தில் வாஹன லாபம் பசுவிருத்தி தனலாபம் இராஜ்ய லாபம் நினைத்ததை கூடுதல் கலியாண பிராப்தி மாதுர் பிதுர் சௌக்கியம் இராஜாக்களால் உதவியும் மேற்கு திசையில் பிரயாணங்களும் எத்தனை காரியம்கைகூடுதலும் ஏற்படும் புதன்லக்கினத்துக்கும் திசாதனுக்கும் பாபயுக்தனாக ஷஷ்டாஷ்டக வியத்தில் சுப பார்வை இல்லாமல் நின்றால் கலகம் சோர பயம்மரண பயம் ஸ்தான பிரஷ்டம் பித்தசுரம் உண்டாகும் புதன் 2-7ம் ஸ்தானங்களுக்கு அதிபதியாக இருத்தாலும் கூடினாலும் தேகத்துக்கு ஹானி வரும் இதற்கு பரிகாரம்:- விஷ்ணுஜபம் பாராயணம் செய்ய உத்தமம்

குரு திசையில் கேதுரித்தி மீ 11 நாள் 6 க்கு பலன்

இந்த கேது லக்கினத்துக்கு கேந்திர கோணங்களில் சுபருடன் கூடினாலும் அல்பசௌக்கியம் ஏற்படும் இந்த கேது பாபருடன் கூடி பாபர் திருஷ்டி பெற்றிருந்தாலும் 6,8,'12ல் இருந்தாலும் தாரம் புத்திர ஹானி சத்துரு பீடை இராஜகோ பம் தேகம் பந்தனம் ரோகம் பீடை ஏற்படும் கேது 2,7ஸ்தா னங்களிலிருந்தால் தேகத்திற்கு ஜாட்டியம் உண்டாகும் அல்லது தாரத்திற்கு தோஷம் ஏற்படும் இதற்கு பரிகாரம் மிருத்தியு ஜபம் கேது பிரீதி செய்ய விலகும்

குரு திசையில் சுக்கிர புத்தி ஷ 2 மீ 8 பலன்

இந்த சுக்கிரன் ஸ்வக்ஷேத்திர கோண லாப உச்சத்திலி ருந்தாலும் பாக்கிய கர்மாதிபதிகளோடு கூடினாலும் சுபர்களு டன் சேர்ந்து பார்க்கப்பட்டாலும் ஐஸ்வர்யம் இராஜ விஸ்வா வாகம் ஸ்திரி சம்போகம் கிரஹத்தில் கலியாண வைபவமும் வட திசையில் மித்துரு தெரிசனம் குருபக்தி சுய அதிகார விர்த்தி வித்வ ஜன ஸ்மகாமம் க்ஷீரான்ன போஜனம் கிரஹ கூப நிர்மாணம் உண்டாகும்

சுக்கிரன் 6 8 12-ல் நீசத்தில் சத்துரு கிரஹங்களுடன் கூடியிருந்தால் விவாஹ விக்கினம் ஸ்திரி சலகம் பந்துவிரோதம் த்வி கனத்திர பிராப்தி களத்திரதோஷம் புத்திர நஷ்டம் அன்னிய கிராம வாசம் மனோவியாகூலம் ருண பாதை ஏற்படும்

சுக்கிரன் 2 7 அதிபதியாய் ஷ ஸ்தானங்களில் நிற்கில் அபமிருத்து தோஷம் இராஜ தண்டனை தேக ஜாட்டியம் உண்டாகும் இதற்கு பரிகாரம் துர்க்கை பூஜை லஷ்மி பூஜை செய்ய பரிகாரம் ஏற்படும்

குரு திசையில் சூரிய புத்தி
மாசம் 9 நாள் 18
இதற்கு பலன்

இந்த சூரியன் ஸ்வக்ஷேத்திர ஸ்வாதிசையில் சுபருடன் கூடியிருந்தாலும் கேந்திர கோணங்களில் சுபர் பார்வை அடைந்தாலும் பலவானாக யிருந்தாலும் திசானாதனுக்கும் அப்படியே யிருந்தாலும் கீர்த்தி விர்த்தியாலாபம் தத்வ சாஸ்திரம் பிரசங்கம் உத்தியோக மேன்மை பிரமோஷம் தர்ம காரியம் ஏற்படுதல் இவைகள் ஏற்படும்

சூரியன் ஷஷ்டாஷ்டக வியத்தில் நீசனாக சனியுடன் சேர்ந்திருந்தால் சிரசு தந்த ரோகம் அதிகாரம் பீடை ஜ்வரம் கர்மநாசம் பந்து தாயாதி விரோதம் பந்து ஜனகஷ்டம் அரிஷ்டம் ருண தனபாதை இராஜ நிர்பந்தம் களத்திர புத்திர பீடைகள் உண்டாகும் இந்த சூரியன் லக்கினத்திற்கு 2-7ல் அதிபதியாக இருந்து பாப கிரஹத்துடன் சேர்ந்து இருக்கும் பக்ஷத்தில் தேக ஜாட்டியம் பயம் உண்டாகும் இதற்கு பரிகாரம்:- சூரியநமஸ்காரம் நவக்கிரக பூஜை செய்ய விலகும்

குரு திசையில் சந்திர புத்தி ௵ 1 ௴ 4 இதற்கு பலன்

இந்த சந்திரன் கேந்திர கோண லாப ஸ்வக்ஷேத்திரனாய் பூர்ண பரிமுள்ளவனாக இருந்தால் இராஜ்ய லாபம் கீர்த்தி தாரபுத்திர சௌக்கியம் இராஜ்பிரீதி வீட்டில் சுபகாரியங்கள் கலியாணம் ஆரோக்கியம் லாபம் உண்டாகும் சந்திரன் திசா

நாதனுக்கும் 5-6 ம் இடங்களில் இருந்தால் கிரஹத்தில்இல ஷ்மி கடாக்ஷம் சௌபாக்கியம் உண்டாகும் லக்கினத்திற்கும் திசாநாதனுக்கும் ஷஷ்டாஷ்டக வியத்தில் பாபருடன் கூடியிருந்தால் இராஜ நிந்தனை ரோகம் பீடை சீதசுரம் ஏற்படும் அன்னிய தேச வாசமும் உண்டாகும் சந்திரன் 2-7 ம் இடங்களில் தேகபாதை பீடை துவேசம் ஏற்படும் இதற்கு பரிகாரம்:- லஷ்மி பூஜை ஜபம் செய்ய விலகும்

குரு திசையில் அங்காரக புத்தி மீ 11 நாள் 6 பலன்

இந்த அங்காரகன் ஸ்வக்ஷேத்திர திரிகோணத்திலிருந்தால் திதியில் அல்ப லாபம் தனதான்ய விருத்தி உண்டாகும் சகோதாருகுரண பணச்சிலவு பயம் ஏற்படும் பிதுர் வர்க்கத்தில் விவகாரங்கள் தான்னிய லாபம் பந்து ஜன தெரிசனம் வியாபார லாபம் உண்டாகும் அங்காரகன் குரூர கிரஹத்தினுடன் கூடினாலும் அவனால் பார்த்தாலும் திசாநாதனுக்கு ஷஷ்டாஷ்டக விபத்தில் பாபயுக்தனாக யிருந்தாலும் சகல காரியத்திற்கு ஹானி நேத்திர வியாதி அன்னிய தேசம் பயணம் உண்டாகும்.

அங்காரகன் 2 7-ம் இடத்தில் இருந்தால் தேக ஜாட்டிகை பயம் வரும் இதற்கு பரிகாரம் முருகன் ஜபம் பூஜை தீபம் போட விலகும்.

குரு திசையில் ராகு புத்தி
வருஷம் 2 மீ 4 நாள் 24 இதற்கு பலன்

இந்த ராகு கேந்திர கோணத்தில் அந்த அதிபதிகளுடன் கூடியிருந்தாலும் உச்ச லாப ஸ்தானங்களில் சுப கிரஹங்க்ளுடன் கூடியிருந்தாலும் பிரபு தெரிசனம் கிரஹத்தில் கலியாண வைபவங்களும் சேனாதிபதி அதிகாரமும் சேதுஸ்னானம் தனதான்ய லர்ச்ம் சத்துரு நாசம் இராஜதெரிசனம் காரியானுகூலம் தென் மேற்கு தெற்குதிசையில் பிரயாணம் பந்து மித்துருக்கள் வருதலும் ஏற்படும்

இந்த ராகு ஷஷ்டாஷ்டக விபத்தில் நீச,பாப ராசிகளில் இருப்பினும் திசாநாதனுக்கு துர்ஸ்தானங்களில் பாப கிரஹங்கள் கூடினாலும் பார்வை அடைந்தாலும் புண்ணிய கர்ம நாசம் இராஜ சோராக்கினி பாதை, களத்திர புத்திர ஹானி பந்து மித்துரு விரோதம் மனோ விபாதி உண்டாகும்

ராகு 2, 7ல் மாரக கிரஹத்துடன் கூடினால் அபமிருத்யு தோஷம் உண்டாகும் இதற்கு பரிகாரம் மிருத்யு ஜபம் செய்ய விலகும் சுகம் உண்டாகும்.

சனி மகா திசை 19 வருஷம்
சனி மகா திசையில் சனி புத்தி
வருஷம் 30 நாள் 3 இதற்கு பலன்

குறிப்பு:- சனி மகா திசை பூராவும். அர்ச்சனை-எள்ளு-தீபம் போட சௌக்கியம் ஏற்படும்

இந்த சனி லக்கினத்திற்கு கேந்திர கோண உச்ச சுப வர்க்க சுப லாபஸ்தானங்களிலும் 3ம் இடத்தில் சுப கிரஹங்களுடன் இருக்கும் பக்ஷத்தில் இராஜ்ய லாபம் ராஜா அநுகூலம் ரத்தின பூஷண லாப சத்துரு ஜயம், பந்து, மித்துருக்களால் இஷ்ட காரிய லாபம் சத்துரு ஜயம், மேற்கு திசை பிரயாணத்தினால் மித்துரு தெரிசனம் நீசவஸ்து வியாபாரத்தினால் லாபம் பந்து ஜன விசுவாசம் சுபகாரியம் எத்தனம் உண்டாகும்

இந்த சனி ஷஷ்டாஷ்ட விபத்தில் இருந்தாலும் பாபநீச ஸ்தானங்களில் பாப கிரஹங்களுடன் இருக்கும் பக்ஷத்தில் விஷ சாஸ்திர அக்கினி பாதைகளும் ருணபீடையும் களத்திர புத்திர தோஷம் ஸ்தான பிரஷ்டம் உண்டாகும்

சனி 2, 7ம் இடங்களில் இருந்தாலும் ஸ்தன ஆதிபத்தியம் உண்டாகும் தேஹ ஜாட்டியம் விரண ஜ்வரம் அபமிருத்யு தோஷம் உண்டாகும் இதற்கு பரிகாரம் துர்க்கை பூஜை செய்ய உத்தமம் சௌக்கியம் ஏற்படும்.

## சனி திசையில் புதன் புத்தி
## வருஷம் 2 மாசம் 8 நாள் 9
## இதற்கு பலன்

இந்த புதன் கேந்திர கோண லாபத்தில் சுப கிரகங்களுடன் (லக்கினத்திற்கும் திசாநாதனுக்கும்) இருக்கும் பக்ஷத்தில் இராஜயோகம் கிரஹந்தில் கலியாணம் சேதுஸ்நானம் வியாபார மூலம் குரு லாபம் தேவதா தெரிபனம் தனதான்ய விருத்தி அன்னதானம் ஏற்படும் இந்த புதன் ஷஷ்டாஷ்டக விய நீச ராசிகளிலும் பாப க்ஷேத்திரத்தில் பாப கிரகங்களுடன் கூடினால் களத்திர பீடையும் காரிய விக்னம் தேகபீடை உண்டாகும் புதன் 2 7 ஸ்தானாதிபதியுடன் கூடினால் இராஜ பயம் வாத சிலேஷ்மாதி ரோக பீடைகளும் இராஜவிவகாரங்களும் உண்டாகும் இதற்கு பரிகாரம்:- விஷ்ணு ஸகஸ்ரநாமம் பாராயணம் செய்யவிலகும் ஆயுர்ஆரோக்கியம் ஏற்படும்

## சனி திசையில் கேது புத்தி ௵ 1 ௴ 1 நாள் 9 பலன்

இந்த கேது சுபாம்சத்திலாவது சுபஸ்தானங்களிலாவது கேந்திரங்களிலாவது அந்த அதிபதியோடு கூடினாலும் கலியாண சுபகாரியமும் யத்தின காரியானுகூலமும் மித்திரனால் தனலாபமும் உண்டாகும் இந்த கேது லக்கினத்திற்கும் திசாநாதனுக்கும் ஷஷ்டாஷ்டக வியத்தில் பாபருடன் இருக்கும் பக்ஷத்தில் களத்திர புத்திர பீடை ஜ்வர ரணபீடைகள் உண்டாக்கும். கேது 2, 7 ஸ்தானங்களில் நீச கிரஹங்களுடன் கூடினால் நாலாவித கஷ்டங்கள் ஏற்படும் இதற்கு பரிகாரம் மிருத்துயு ஜபம் செய்ய உத்தமம்.

## சனி திசையில் சுக்கிர புத்தி ௵ 3 ௴ 2 இதற்கு பலன்

இந்த சுக்கிரன் ஸ்வ க்ஷேத்திர கேந்திர உச்சத்திலிருந்தாலும் சுப கிரஹங்களுடன் கூடினாலும் திசாநாதனுக்கு கேந்திர கோண லாபஸ்தானங்களில் பலவானாக இருந்தாலும் கர்மாதியுடன் கூடினாலும் கிரஹத்தில் விவாஹம் ராஜ்யலாபமும் வியாபார லாபமும் தனதான்ய விருத்தியும் தடாக நிர்மா

னமும் பந்து மித்துரு சிநேகமும் புத்திர உற்பத்தியும் சுப
காரமும் வி யா பா ர மூல லாபமும் சங்கீதமாசங்கம்
சௌக்கியம் ஏற்படும். சுக்கிரனும் சனியும் கூடில் இராஜ
கம் தைரியம் உண்டாகும். சுக்கிரன் லக்கினந்திற்கு
நீச பாப க்ஷேத்திரங்களில் இருந்தால் களத்திரதோஷம்
விர ம் ராஜவிவதாரங்களும் அநாசாரம் பிரதுர்வர்க்ம
தம் ஸ்வ ஜன மரணம் வரும். சுக்கிரன் 2-7 ம் ஸ்தானு
யாகயிருந்து பாப கிரஹத்துடன் கூடியிருந்தால் அந்த
னங்களில் மாரக கிரஹங்களுடன் கூடினுலும் அபமிரு
தோஷம் உண்டாகும் இ த ற் கு பரிகாரம்:- துர்க்கை பூ
செய்ய ஆயுள் விருத்தி பாக்கியம் ஏற்படும்,

சனி திசையில் சூரிய புத்தி மீ' 11 நாள் 12க்கு பலன்

இந்த சூரியன் கேந்திர கோ ண லாப ஸ்தானங்க
பாக்கியாதிபதியுடன் கூடியிருந்தாலும் ஸ்வக்ஷேத்திர
மித்துரு ஸ்தானதிபதியுடன் கூடியிருந்தால் சுபருடன்
னுலும் கிரகத்தில் க லி ய ா ண ம் சுபகாரியங்களும்
தனதான்யு விர்த்தியும் வியாபார மூலியமாக தனலாப
புத்திரோத்ஸவமும் துர்ஜன நாசமும் ராஜ விசுவாசமும்
ணிய தேச சஞ்சாரம் யோகி தெரிசனமும் பிதா சௌ
மும் உண்டாகுப் சூரியன் ஷஷ்டாஷ்டக வியத்தில் நீச
னத்திலாவது பாபு கிரஹத்துடன் கூடினுலும் பார்க்க
டாலும் மனோவியாதிருண தனபீடை மார்வலி மானப
பிதுர் ஜனரிஷ்டம் பந்தனம் ராஜ பம் உண்டாகும். சூரி
லக்கினத்திற்கு 2 7ம் ஸ்தானங்களிலிருந்தாலும் அந்த
பதிகளுடன் கூடினுலும் தேஹ ஜாட்டிகை உஷ்ணரோ
வரும்

இதற்கு பரிகாரம் சூரிய நமஸ்காரம் சனி தீபம்
விலகும்.

சனி திசையில் சந்திர புத்தி
வருஷம் 1 மாசம் 7 இதற்கு பலன்

இந்த சந்திரன் கேந்திர கோண உச்ச லாப ஸ்தா
களில் சுப திருஷ்டி இருந்து சுபருடன் கூடினுல் இரா

சத்திரிந்தாலும் கஷ்டத்தை கொடுக்கும் க்ஷீணனுக சந்திரன் திசானுதனுக்கு ஷஷ்டாஷ்டக விபத்தில் இருந்தால் மாதுரு பிதுரு அரிஷ்டம்களத்திரரிஷ்திலி இருந்தால் மாதுரு பிதுரு அரிஷ்டம்களத்திரரிஷ்டம் தனவிரயம் ராஜ ஜன விரோதம் கலகம் வரும் சந்திரன் 27 அதிபதிகளுடன் கூடினுல் அபமிருத்து தோஷம் ஏற்படும், இதற்கு பரிகாரம்:- துர்க்கைஜபம் (சந்திரன் அம்பிகை காளி) இவர்களுக்கு அர்ச்சனை செய்யவும்

### சனிதிசையில் அங்காரகபுத்தி ஞூ 1 மீ 1 நாள் 9 இதற்கு பலன்

இந்த செவ்வாய் ஸ்வ க்ஷேத்திர திரிகோண லா பத்தில் திசானுதனுடன் கூடினுல் சுரம் கபம் வாத பித்தமும் இலக்கினாதிபதியுடன் கூடினுலும் ஸ்வ க்ஷேத்திரத்தில் அவருடன் இருந்தாலும் சேனுதிபத் திபம் சந்தோஷம் வாகனம் பூஷணம் இவைகள் ஏற்படும். செவ்வாய் | அஷ்டமாதிபதியுடன் கூடினுலும் 2-7ம் அதிபதியுடன் சனியுடனும் கூடினுல் அபமிருத்துயு தோஷம் வரும் அங்காரகன் ஷஷ்டாஷ்டக விபத்தில் சனியுடன் கூடியிருந்தால் அபமிருத்துயு தோஷம் வரும். இதற்கு பரிகாரம்:- சுப்பிரமணியா ஜபம் தீபம் ப்ரீதி செய்யவிலகும். (சனியும் செவ்வாய்) பகை ஜபம் குருவருக்கும் முக்கியம் செய்ய வேண்டும்.

### சனிதிசையில் இராகுபுத்தி வருஷம் 2 மாதம் 10 நாள் 6 இதற்கு பலன்

இந்தராகு லக்கினத்திற்கு கேந்திர கோண உச்ச ஸ்தானங்களில் சுபர்களுடன் கூடினுலும் அல்லது அந்தந்த ஸ்தானுதிபதிகளோடு கூடியிருந்தாலும் பிரயத்தன காரியம் அனுகூலமும் வியாபார தனலாபச் சுபகாரியங்களும் இராஜ அனுக்கிரகத்தினுல் இடம் காரிய சித்தியும் உண்டாகும்.

### சனிதிசையில் இராகுபுத்தி

இந்த ராகு மேஷம் ரிஷபம் கடகம் கன்னி தனுசு இந்த ராசிகளில் சுபகிரஹங்களுடன் கூடில் ராஜபந்து மித்துரு ... மானம் ஸ்திரி சம்போகம் ஏற்படும்

இந்த ராகு முதலில் மனோவேதனையும் கலகமும் புத்திர துவேஷம் தனவிறயம் சத்துருபயம் ஏற்படுத்தும் தெ... தென்மேற்கு திசையில் பிரயாணமும் யத்தன காரியவி... மும் உண்டாகும்படி செய்யும் பிறகு சௌக்கியம் ஏற்படு... ராகு 27ம் ஸ்தானங்களில் மாரக கிரஹங்களுடன் கூடினு... பார்க்கப்பட்டாலும் தேக ஜாட்டிகை விஷபயம் ஏற்படு... இதற்கு பரிகாரம் மிருத்துயு ஜபம்செய்ய ஆயுர்விருத்தி உண்டாகும்.

### சனிதிசையில் குருபுத்தி

வருஷம் 2 மீ 6 நாள் 12 இதற்கு பலன்

இந்த குரு கேந்திர கோணம் லாபத்தில் உச்ச ஸ்வ... த்திரனாய் சுபர்களுடன் கூடி சுபாம்ச பெற்றிருந்... நற்கீர்த்தி தேவதா பூஜை லக்ஷிமிகடாக்ஷம் இராஜ ... னம் எத்தன காரியம் ஜயம் பெரியோர்கள் சகவாசம் ... மனுள் சகவாசம் உண்டாகும்.

குரு ஷஷ்டாஷ்டக வியத்தில் பாபருடன் கூடி... துஷ்ட ஸ்திரிபாப கர்மங்கள் அல்ப சௌக்கியம் ஏற்ப...

குரு திசானுதனுக்கு கேந்திர கோணம் லாபத்... இருந்தால் தன சம்பந்தம் வாகன லாபம் பிரதாபம் கீ... பூஷணம் அலங்காரம் ஏற்படும்.

குரு திசானுதனுக்கு 6 8 12ல் நீசத்தில் இருந்தா... கூடினாலும் கலகம் பந்தனம் தேகபிணியும் உண்டாகும்.

இரு 27ல் அதிபதிகளுடன் கூடியிருந்தால் அபமிருத்... தீத்தோஷம் வரும் இதற்கு பரிகாரம் விஷ்ணு ஜபம் செ... ரேும்.

## புதன் திசை 17-வருஷம்
## புதன் புத்தி வருஷம் 2 மாசம் 4
## நாள் 27க்கு பலன்

இந்த புதன் லக்கினத்திற்குகேந்திர கோணங்களில் ஸ்வ உச்ச மித்துரு க்ஷேத்திரங்களிலாவது சுபா அம்சத்தில் சுபர் களுடன் கூடினுலும்பார்க்கப் பட்டாலும் திசானுதனுக்கும் அப்படியேயிருந்தாலும் ஆரோக்கியம் புகழ் உற்பத்தி வித்தியாபிவிருத்தி ரத்னபூஷணலாபம் கலியாண சுபகாரியம் வியாபார உத்தியோகம் பிராப்தியும் விவகார மூலம் லாபம் யத்தின காரியம் ஜயமும் சங்கீத வாத்திய கேள்விகளில் மகிழ்ச்சியும் பிராமண சத்சங்கமும் சித்தியும் உண்டாகும்.

புதன் ஷஷ்டாஷ்டக விய நீசபாபசத்துருக்ஷேத் திரங் களில்பாப கிரஹங்களுடன் கூடியிருக்கும்பக்ஷத்தில் தன தான்ய பசு அபிவீர்த்தியும் மித்துரு ஜன துவேஷம் யத்தின காரியம் விக்கினம் காராகிருஹம் வாசம் இராஜ துவேஷம் உண்டாகும் புதன் 27ம் ஸ்தானங்களில் நின்ருலும் அதிபதி யானுலும் அந்த ஸ்தானங்களில் மாரக கிரகங்களுடன் கூடி யிருக்கும் பக்ஷத்தில் பந்துமித்துரு களத்திர அரிஷ்டமும் வியாதி வாத சூலை பீடையும் ஏற்படும்.

புதன் திசை புதன்புத்தி இதற்கு பரிகாரம் :

விஷ்ணு சஹஸ்ரநாமம்ஜபம் பாரயணம் லக்ஷிமி பிரதிமை தானம் செய்ய ஆயுர் ஆரோக்கியம் பாக்கியம் உண்டாகும்

## புதன் திசையில் கேது புத்து
## மாசம் 11 நாள் 27
## இதற்கு பலன்

இந்த கேது லக்கினத்திற்கு கேந்திர கோணங்களில் சுபருடன் கூடி சுபபார்வை அடைந்தாலும் இலக்கினுதி பதியுடன் கூடினுலும் சொற்ப லாபம் பந்து சிநேகம் மேற்கு திசையில்பிராயாணம் லாபம்ஜீவனலாபம் வியாபார உத்தி யோக பிராப்தியும் வித்தியா கீர்த்தியும் கலியாணம் சுப பிராப்தியும் உண்டாகும்.

இந்த கேதுஷஷ்டாஷ்டக வியத்தில் பாபருடன் கூடி பாபர் திருஷ்டி பெற்றிருந்தால் சோரக்கினிபயம். இராஜ்ய பயம் பாப கருமம் செய்கை வானத்திலிருந்து விழுதலும் உண்டாகும் தவிற ஸ்தான பிரஷ்டம் மாதுர் பீடை மனோ வியாதி ராஜ தண்டனை ஏற்படும்.

கேது 27ம் ஸ்தானங்களில் இருப்பாராகில் தேஹ ஜாட்டிகை காரியகேடு தனவிறயம் ஏற்படும் இதற்கு பரிகா ரம் துர்க்கை ஜபம் தீபம் போட விலகும்.

புதன் திசையில் சுக்கிரபுத்தி
வருஷம் 2 மீ 10
இதற்கு பலன்

இந்த சுக்கிரன் லக்கினத்திற்கு கேந்திர கோணலாப ஸ்வக்ஷேத்ரங்களில் சுப கிரஹங்களுடன் கூடியிருக்கில் சத்கதா சிரவணமும் தான தர்ம சம்பத்து பிரபுவின் சகாயம் நூதன கிரஹம் பிராப்தி உண்டாகும்.

சுக்கிரன் தர்ம கர்மாதிபதியுடன் கூடி பலவானாக கேந்தி கோணங்களில் இருப்பானாகில் இராஜ விசுவாசம் கூட தடாக நிர்மாணம் வியாபாரங்களில் தனலாபம் ரத்தின பூஷணாதி வாஹனாதி லாபமும் கிரகத்தில் கல்யாண வைப வங்களும் புத்திர உற்பத்தியும் சுக்கிரன் லக்கினத்திற்கு ஷஷ்டாஷ்டக விய, நீச, சத்துருராசிகளில் பாபகிரஹங் களோடு கூடினாலும் பார்க்கப்பட்டாலும் மனோவியாதி மானஹானி புத்திமாருட்டம் மாதுருஜன பீடையும் ஸ்தான பிரஷ்டம் களத்திர கலகம் ராஜதண்டனை ருண தனபீடையும் ஏற்படும். சுக்கிரன் 27ம் ஸ்தானங்களில் அதிபதியாக பாப கிரஹங்களுடன் இருந்தால் அபமிருத்துயு தோஷம் ஏற்படும் இதற்கு பிரிகாரம்:-சூரியநமஸ்காரம் விஷ்ணுஜப பாராயணம் செய்ய ஆயுர்விருத்தி உண்டாகும்.

புதன் திசையில் சந்திரபுத்தி வரு 1 மீ 5 க்கு பலன்

இந்தசந்திரன் கேந்திர கோண உச்ச ஸ்வக்ஷேத்திர மூலதிருகோணங்களில் குருபார்வை அடைந்தால் ஸ்திரீலா பம் புத்திரலாபம் ரத்தினமுத்து விக்கிரயலாபம் கிரஹநிர் மாணம் சங்கீதவாத்திய கோஷ்டிகளுடன் போதல் சாஸ்திர பிரசங்களுக்கு சேர்தல் கிரகத்தில் சுபகாரியங்களும் தேவதா உச்சவ தெரிசனமும் வியாபார லாபமும் உண்டாகும்

சந்திரன் ஷஷ்ராஷ்'டக விய நீச சத்துரு பாபருடன் ரசுட க்ஷீண சந்திரனுகயிருந்தாலும் பாபர்களால் பார்க்கபட்டடிப் லும் பந்துவிரோதம் தார புத்திரபீடை தனதான்ய விரயம் ராஜதுவேஷப வாதசிலேஷம் தேக ஜாட்டிகை தன ஹானி யும் உண்டாகும். சந்திரன் 27ம் இடத்துக்கு அதிபதியாக இருந்தால் அந்த ஸ்தானங்களிலிருந்தாலும் பாபகிரஹங்களு டன் கூடியிருப்பானுகில் சோர பயம் இராஜபயம் தேகபீடை துஷ்டஸ்திரி சங்கமம் பீடை உண்டாகும். இதற்குபரிகாரம்:- துர்க்கைபூஜை ஜபம் செய்ய விலகும் உத்தமம்.

## புதன் திசையில் அங்காரகபுத்தி மீ 11 நாள் 27 க்கு பலன்

இந்த செவ்வாய் (அங்காரகன்) கேந்திர கோண உச்ச ஸ்வக்ஷேத்திரனுய் இலக்கினதிபதியுடன் கூடினுல் இராஜ பிரீதி லாபம் நஷ்டமான பொருள் கை கூடுதல் திசானுத னுக்கு கேந்திர கோண லாபத்தில் பாபருடன் கூடி பார்வை பெற்றிருந்தாலும் மாதுர்ஹானி மனேவியா கூலம் அபகீர்த்தி மானபங்கம் சர்வம் விறயம் உண்டாகும் ஷ ஸ்தானங்களில் சுபர் திருஷ்டி பெற்ருல் சொற்பலாபம் உண்டாகும். அங் காரன் ஷஷ்டாஷ்டக வியத்தில் நீசனுனல் தேகத்திற்கு சுரம் வீட்டில் கலகம் பீடைரோகம் ஸ்தான பிரஷ்டம் உண் டாகும் 2-7ம் இடத்துக்கு அதிபதியாய் இருந்தால் அபமிருத் துயு தோஷம் வரும் இதற்கு பரிகாரம்:-சுப்பிரமணியனுக்கு அர்ச்சனை ஜபம் விஷ்ணுஜபம் பூஜை செய்ய விலகும்,

## புதன் திசையில் இராகுபுத்தி வருஷம் 2 மாசம் 6 நாள் 18 இதற்கு பலன்

இந்த ராகு கேந்திரகோண ஸ்தானங்களிலாவது கடகம் சிம்மம் கன்னி விருஷப ராசியிலாவது சுபகிரகங்களு டன் கூடியிருப்பானுகில் ராஜானு கூலம் கிரகத்தில் கலியா ணம் உத்தியோக சுகம் பந்து சன்மானம் வியாபார லாபம்

புண்ணிய தீர்த்தஸ்நானம் தேவதா தெரிசனம் லாபம் யத்தின காரியானுகூலம் உண்டாகும். ராகு ஷஷ்டாஷ்டக விய நீச ராசியில் பாபகிரக சம்பந்தம் பெற்ருல் விரண சஸ்திர பீடை ஸ்தான சஞ்சலம் சோராக்கினி விஷபயம் களத்திர ரோகம் கிலேசம் உண்டாகும் ராகு 2-7ம் ஸ்தானங் களில் பாப கிரஹங்களோடு கூடியிருப்பானுகில் அபமிருத்யு தோஷம் உண்டாகும் இதற்கு பரிகாரம்:- ராகுபிரீதி மிருத் துயு ஜபம் [விஷ்ணு ஜபம்) புற்றுக்கு பால் வார்க்க ஆயுர் ஆரோக்கியம் ஏற்படும்.

புதன் திசையில் குருபுத்தி வருஷம் 2 மாசம் 3 நாள் 6 க்கு பலன்

இந்த குரு கேந்திரகோண ஸ்வ க்ஷேத்திர உச்ச ஸ்வாம்ச மித்துரு க்ஷேத்திரங்களில் தனபாக்கியாதிப திகளு டன் கூடினுலும் திசானுதனுக்கு கேந்திர கோணத்தில் தன் பார்வை அடைந்தாலும் சேர்ந்தாலும் விவாஹ காரியம் தேவதாகுருபக்தியும் யஞ்ஜகர்மாதி காரியஸித்தியும் புத்திர வர்க்கத்தில கலியாணமும் பரோபகாரியமும் உண்டாகும். குரு ஷஷ்டாஷ்டக விய நீச ஸ்தானங்களில் பாபகிரஹங் களுடன் கூடினுலும் பார்க்கப்பட்டாலும் களத்திரபுத்திர விசனம்ராஜ தண்டனை பந்து துவேஷம் பந்தனம் விஷஜ் வரம் சரீரபீடை மாதுரு கர்மம் ஏற்படும். குரு லக்கினத் திற்கு 2 7ம் இடங்களில் அதிபதியாக இருந்தாலும் அபமிருத் துயு தோஷம் உண்டாகும். இதற்கு பரிகாரம்:-விஷ்ணு சஹஸ்ரநாமம் ஜபம்செய்ய உத்தமம் விலகும் பிரம்ம போ ஜனம் செய்ய ஆரோக்கியம் உண்டாகும்.

## புதன் திசையில் சனிபுத்தி வரு 2 மீ 8 நாள் 9 இதற்கு பலன்

இந்த சனிபகவான் ஸ்வ க்ஷேத்திர கேந்திர கோணங்களில் லாபனாகவும் லாபஸ்தானத்தில் இருந்தாலும் சுபர் பார்வை பெற்றாலும் சுபர் களுடன் கூடி சுபர் ஸ்தானங்களிலிருந்தாலும் சேது ஸ்நானம் பலனும் புத்திர ஜனனமும் ராஜ்ய லாபமும் கிரஹதான்னிய லாபம் கிரஹத்தில் சுபகாரியயத்தனமும் நீச ஜன சிநேகமும் நீசவஸ்து வியாபாரமும் காரியானு கூலம் மனோதைரியமும் உண்டாகும், சனி லக்கினத்திற்கு ஷஷ்டாஷ்டக விய நீச பாப க்ஷேத்திரங்களில் பாப கிரஹங்களுடன் இருப்பானாகில் கலகங்களும் துக்கமும் களத்திரபுத்திர அரிஷ்டமும் இந்த பிரமை கர்மநாசம் தேஹ ஜாட்டிகை உண்டாகும். சனி2 7ம் இடங்களில் பாபகிரஹங்களுடன் இருந்தாலும் மாரக கிரஹங்களுடன் கூடினாலும் தேக ஜாட்டிகை அபமிருத்யு தோஷம் உண்டாகும். இதற்கு பரிகாரம்:- மஹிஷாதானம் (எருமைகிடா) தானமும் சனிஜபம் செய்ய விலகும் உத்தமர்

## கேதுதிசை 7 வருஷம் கேதுதிசையில் கேதுபுத்தி மீ 4 நாள் 27 இதற்கு பலன்

கேது லக்கினத்திற்கு கேந்திர கோணலாப பாக்கியாதிபதியோடு கூடினாலும் சுப ஸ்தானங்களிலிருந்தாலுமா களத்திர புத்திர சௌக்கியம் புண்ணிய தீர்த்தம் ஸ்நானம் தேவகுரு தெரிசனம் இராஜபிரீதி சர்வ காரியங்கள் கைகூடுதலும் கிரஹத்தில் கலியாணங்களும் தைரியமும் உண்டாகும். கேது ஷஷ்டாஷ்டக வியத்திலிருந்தால் தேசசஞ்சாரம் மனோவியாதிமான வியாதி மானஹானி ராஜதுவேஷம் நீச சத்துரு கலகம் நீசஸ்தானத்தில் பாபருடன் கூடியிருக்கில் காரிய விக்கினம் இடம்பெயர்த்தலும் விஷசர்ப்பஜந்து உபத்திரவம் உண்டாகும். கேது லக்கினத்துக்கு 27ம் இடத்தில் மாரககிரஹங்களுடன் கூடினால் அபமிருத்யு

தோஷம் வரும். இதற்கு பரிகாரம்:- துர்க்கை ஜபம் செய் விலகும்,

கேது திசையில் சுக்கிரபுத்தி வரு 1 மீ 2க்கு பலன்

இந்த சுக்கிரன் லக்கினத்திற்கு கேந்திர கோண உச் ஸ்வ க்ஷேத்திரத்தில் லாப ஸ்தானங்களில் யோககாரக னும் தர்மகர்மாதிபதியுடன் கூடினாலும் திசாநாதனு கேந்திர கோண ஸ்தானங்களில் சுபர்களுடன் கூடின பார்வையடைந்தாலும் பசு பூமி தனப்ராப்தி தேவதா சனம் வஸ்திர பூஷணம் விக்கிறய லாபம் கிரஹத்தில் காரியங்களும் சங்கீதஞானம் ராஜமித்துரு பந்து சன்மா சத்கதாஸ்ரவணம் வியாபார லாபம் உண்டாகும். சுக்கிர ஷஷ்டாஷ்டக விய ஸ்தானங்களில் நீசஸ்தானங்களில் பா கிரகங்களுடன் இருக்கும் பக்ஷத்தில் ஸ்தானபிரஷ்டம் பந் மித்துரு கோபம் ராஜ தண்டனை கோபம் மானஹானி உ டாகும் சுக்கிரன் 2-7ம் ஸ்தானங்களுக்கு அதிபதி சத்துரு கிரஹங்களுடனும் பாபிகளுடனும் கூடியிருக்கில் அ மிருந்துயு தோஷம் ஏற்படும். இதற்கு பரிகாரம்:- துர்க்க அம்பிகை ஜபம் பூஜை செய்ய உத்தமம்,

கேது திசையில் சூரிய புத்தி மீ 4நாள் 6க்கு பலன்

இந்த சூரியன் லக்கின கேந்திர கோண லாபஸ்தான களிலாவது ஸ்வக்ஷேத்திர உச்சம் ஸ்தானத்தில் சுப கிரக களுடன்கூடினால் தனதான்ய அனுகூலம் சத்காரியானுகூ கலியாணம் வைபவம் புத்திர ஜனனம் உண்டாகும். சூரிய ஷஷ்டாஷ்டக வியத்தில் துர் ஸ்தானங்களிலிருந்தாலும் ரா ஸ்தான நாசம் தனம் மாதுரு பித்துரு மரணம் ஜ்வரம் அ சாரம்பீடையும் உண்டாகும். சூரியன் 2-7ம் ஸ்தானங்க அதிபதியாகி நின்றால் அபமிருத்துயு தோஷம் ஏற்படு இதற்கு பரிகாரம்:- சூரிய நமஸ்காரம் செய்ய திரும

### கேது திசையில் சந்திர புத்தி மாசம் 7க்கு பலன்

இந்த சந்திர கேந்திர கோண லாபத்தில் ஸ்வக்ஷேத்திரத்தினுல் சுபர்களுடன் கூடியிருந்தால் இராஜ்ய லாபம் கலியாணம் சுபகாரியம் இராஜ்ய லாபம் புத்திரசபத்ம்து சர்வகாரியம்ப சித்திக்கும் சந்திரன் ஷஷ்டாஷ்டக வியஸ்தானங்களில் பா யுக்தனுக நீசம் பெற்ருல் மனஸ்தாபம காரியவிக்னங் தேகஜாட்டிகை உண்டாகும சந்திரன் திசானுதனுக்கு கேந்திர கோணத்திலிருந்தால் விவசாய விருத்தியும பந்து ஜனயர் சகாயம் உண்டாகு சந்திரன் ஷஷ்டாஷ்டக வியத்திலு அட்டமாதியுடன் கூடினுல் தன தான்ய ஹானியும் வியாகூலம் உண்டாகும் சந்திரன் 2 7ம் அதிபதியாக இருந்தால் அபமிருத்துயு தோஷம் ஏற்படும் இதற்கு பரிகாரம:-தேது பிரீதி சந்திரன் நமஸ்காரக் நவக்கிரக அர்ச்சனை செய்ய விலகும

### கேது திசையில் அங்காரக புத்தி மாசம் 4 நாள் 27 இதற்கு பலன்

இந்த அங்காரகன் கேந்திர கோணங்களில் ஸ்வக்ஷேத்திரனும் சுபருடன் கூடி சுப பசர்வை அடைத்தாலும் திசானுதனுக்கும் அப்படியே இருந்தாலும் இராஜ பிரீதி புத்திரமித்துருகள் செளக்கியம் தனதான்ய விருத்தி மனைவிருத்தி உண்டாகும் இந்த அங்காரகன் லக்கினத்திற்கும் திசானுதனுக்கும் ஷஷ்டாஷ்டக நீசனுய் பாபகிரஹம் சம்பந்தம் பெற்ருல் ஸ்தான பிரஷ்டம் சத்துருவிருத்தி சோராக்னி பயம் அன்னிய தேகவாசம் உண்டாகும். அங்காரகன் 2, 7,ம் அதிபதிகளுடன் கூடினுல் விஷசுரம் விஷபயம் தார பீடை ஏற்படும். இதற்கு பரிகாரம்:- சுப்பிரமணியருக்கு ஜபம் ஹோமம் செய்ய நிவர்த்தியாகும்.

### கேது திசையில் இராகுபுத்தி ஞ 1 நாள் 18 பலன்

இந்த ராகு ஸ்வக்ஷேத்திரம் மித்துருலாப ஸ்தானத்திலிருந்தால் தனம் லாபம் தேச சஞ்சாரம் மிலேச சசவாசம் உண்டாகும் ராகு ஷஷ்டாஷ்டக வியத்திப் பாபருடன் கூடினுல் சீத ஸ்லேஷ்ம சுரம் விஷசுரம் தேகஜாட்டிகை புத்திர யோகம் ஏற்படும். ராகு 2 7ம் அதிபதியாக இருந்தாலும் அபமிருத்துயு தோஷம் துக்கம் பீடை உண்டாகும். இதற்கு பரிகாரம்:- துர்க்கை ஜபம் செய்ய நிவர்த்தியாகும்.

# ருது சாஸ்திரம்



## ருது மாதபலன்

சித்திரை—புருஷனுக்காகாது
வைகாசி—பதிவிரதை
ஆனி—சம்பத்துடையவள்
ஆடி—விபசார குணமுள்ளவள்
ஆவணி—சற்புத்திர பேறு
புரட்டாசி—தன முள்ளவள்
ஐப்பசி—புத்திர ஏற்பட்டு (விதவை)
கார்த்திகை—பலரை தூஷிப்பவள்
மார்கழி—கெட்டநடத்தை
தை—பதிவிரதை
மாசி—பொருள் நஷ்டம்
பங்குனி—வெகுபுத்திரவதி

## ருது திதி பலன்

பிரதமை—கன்னி
த்விதியை—அழகுள்ளவள்
திருதியை—சுகவதி
சதுர்த்தி—சத்துருடையவள்
பஞ்சமி—பாக்கியவதி (புத்திரபேறு)
ஷஷ்டி—ஆசாரமுடையவள்
சப்தமி புத்திரபேறு
அஷ்டமி—பெற்றிழப்பாள்
நவமி—தரித்திரி

தசமி — தர்மிஷ்டி
ஏகாதசி — துக்கமுள்ளவள்
துவாதசி பலமுள்ளவள்
திரயோதசி ...கோபி
சதுர்தசி . சோரம்போவாள்
பௌர்ணமி - குணவதி
அமாவாசை _குலத்தை கெடுப்பவள் தரித்திரம்

## ருது வாரபலன்

ஞாயிறு —புத்திர தோஷமுள்ளவன்
திங்கள் ...பதிவிரதை
செவ்வாய் - விதவை
புதன் .. சற்புத்திரபேறு
வியாழன் — தனமுள்ளவள்
வெள்ளி ...சுகமுள்ளவன்
சனி — தரித்திரம்

## ருது லக்கின பலன்

மேஷம் ...விபசாரி
ரிஷபம் — சுகபோகி (கன்னி)
மிதுனம் ... சம்பத்து உடையவள்
கடகம் ....விபசாரி
சிம்மம் ...புத்திர பேறு
கன்னி ...சுகபோகி
துலாம் ...புத்திரவதி
விருச்சிகம் .. பிறஸ்தரி
தனுசு... பதிவிரதை [கன்னி]
மகரம் ...கற்புடையவள்
கும்பம் .. பொருளுடையவள்
மீனம் புத்தியுடையவள்

# ருது நக்ஷத்திர பலன்

அஸ்வதி-விதவை
பரணி-புத்திரவதி
கிருத்திகை-மலடி
ரோஹிணி-நன்மை
மிருகசிறம்-இனியவள்
திருவாதிரை-வெறுப்புள்ளவள்
புனர்வசு-சுகியுடையவள்
பூசம்-தனமுள்ளவள்
ஆயில்யம்-கபடி
மகம்-பர்த்தா பிரியம்
பூரம்-மலடி
உத்திரம்-சுகமுடையவள்
ஹஸ்தம்-நல்லவள்
சித்திரை-அறிவுள்ளவள்
ஸ்வாதி-குடும்பி
விசாகம்-விதவை
அனுஷம்-ரோகி
கேட்டை-பரஸ்தி
மூலம்-பாலுடையவள்
பூராடம்-அடிமை
உத்திராடம்- தர்மிஷ்டி
திருவோணம்-பாக்கிய முள்ளவள்
அவிட்டம்-சம்பத்து
சதயம்-தரித்திரி
பூரட்டாதி- நல்ல நடையுள்ளவள்
உத்திரட்டாதி-ஸ்ரீமதி
ரேவதி-போகி



றிப்பு: துஷ்ட நக்ஷத்திரங்களில் ருதுவானால். ஆகாத மாதங்கள்

| | |
|---|---|
| ரம்<br>ராடம்<br>ரட்டாதி<br>ரணி<br>ஆயில்யம் | 6 மாதம் தோஷம்<br>இத்த நக்ஷத்திரங்களுடன் ஞாயிறு செவ்வாய் சனி வாரங்கள் கூடினால் ஒரு வருஷம் வரையில் தோஷம். |
| கிருத்திகை<br>திருவாதிரை<br>புனர்வசு<br>மகம்<br>கேட்டை | 3 மாதம் தோஷம்<br>இந்த நக்ஷத்திரங்களுடன் ஞாயிறு செவ்வாய் சனி வாரங்கள் கூடினால் 5-மாதம் வரையில் தோஷம். |

ஷெகுறித்த காலங்கள் வரை தம்பதிகள் ஒருவரை ஒருவர் விலகியிருத்தல் வித்தமம்.

# நாம நக்ஷத்திர விபரம்

ஏற்கனவே முதல் பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஜன்ம நக்ஷத்திரம் தெரியாதவர்கள் தங்கள் பெயர் எழுத்தின் "முதல்" எழுத்தைக் கொண்டு நக்ஷத்திரம் அறிய விபரம் அட்டவணை.

அதாவது சுப்பிரமணியன் - சூரியா - லீலாபதிலீலா. or சூ-லீ என்று வைத்துக்கொண்டு கீழ்கண்டபடி நக்ஷத்திரம் குறிக்கவும்

# நாம நக்ஷத்திரங்கள்

| நக்ஷத்திரம் | பாதங்கள் 1 | 2 | 3 | 4 | துடர் எழுத்துகள் |
|---|---|---|---|---|---|
| அஸ்வதி | சு | சே | சோ | ல | சு-சூ-செ-சே |
| பரணி | லீ | லூ | லே | லோ | சொ சோ சௌ |
| கிருத்திகை | ஆ | ஈ | ஊ | எ | அ ஆ இ ஈ |
| ரோகிணி | ஓ | வா | வி | வு | வ வா வ் வி |
| மிருகசிறம் | வே | வோ | கா | கி | வெ வே வை |
| திருவாதிரை | கூ | க்க | ஞ | ச | கு கூ (வௌ |
| புனர்வசு | கே | கோ | ஹ | ஹி | கெ கே கை |
| பூசம் | கு | ஹே | ஹே | ட | கொ கோ கௌ |
| ஆயில்யம் | டீ | டூ | டே | டோ | மெ மே மை |
| மகம் | மா | மீ | மு | மே | ம மா மி மீ மு மூ |
| பூராம் | மோ | டா | டி | டு | மொ மோ மௌ |
| உத்திரம் | டே | டோ | பா | பி | ப பா பி பீ |
| ஹஸ்தம் | பூ | ஷ | நா | ட்டா | ப பூ |
| சித்திரை | பே | போ | ரா | ரி | பெ பே பொ போ |
| ஸ்வாதி | ரு | ரே | ரோ | த | த தா [தே |
| விசாகம் | கீ | து | தே | தோ | தி தீ தூ தெ |
| அனுஷம் | நா | நீ | நூ | நே | ந நா நி நீ நு நூ |
| கேட்டை | நோ | யா | இ | யூ | நெ நே நை |
| மூலம் | எ | யோ | ப்பா | ப்பி | யு யூ |
| பூராடம் | பூ | தா | பா | ட | உ ஊ எ ஏ ஐ |
| உத்திராடம் | பெ | பே | ஜ | ஜி | ஒ ஓ ஔ |
| திருவோணம் | ஜு | ஜே | ஜோ | க | க கா கி கீ |
| அவிட்டம் | க | கி | கு | கே | ஞ ஞா ஞி |
| சதயம் | கோ | சா | சீ | சூ | தொ தோ தௌ |
| பூரட்டாதி | ஸே | ஸோ | தா | தி | நொ நோ நௌ |
| உத்திரட்டாதி | து | ஸ | த்தா | தி | யா க |
| ரேவதி | தே | தோ | ச்சா | ச்சி | ச சா சி சீ |

குறிப்பு:- ஆண்-பெண் இருவருக்கும் ஜன்ம நக்ஷத்திரம் தெரியாது போனல் 'முதல்' எத்ழுதைக் கொண்டு சாதகம் பொருத்தம் பார்க்கவும்.

# விவாஹ பொருத்தம்

முக்கிய கவனிப்பு:-

விவாஹ பொருத்தங்களுக்கு முதலில் ஸ்திரி புருஷர்களுடைய ஜன்ம நக்ஷத்திரம் தெரியவேண்டும் இது தெரியவர்களுக்கு அவரவர்களுடைய பெயரின் "முதல்" எழுத்திற்குறிப நாம நக்ஷத்திற்குறிய நக்ஷத்திரத்தை கொண்டும் பொருத்தம் பார்க்கலாம் (இதற்கு நாமநக்ஷத்திர அட்டவணையை பார்க்க,

இருவருடைய சாதக குறிப்பு இருந்தால் ஜன்ம நக்ஷத்திரத்தை கொண்டு பொருத்தம் பார்ப்பது மிகவும் விசேஷம் பலன்கள் நன்கு அறியலாம்.

சாதகம்குறிப்பு இல்லாவிடில்புருஷருடைய ஜன்ம நக்ஷத்திரத்துக்கும் ஸ்திரியினுடைய நாம நக்ஷத்த ரத்துக்கும் பொருந்தினல் போதுமானது ஆனல் ஸ்திரியினுடைய நாம நக்ஷத்திரத்துக்கும் புருஷருடைய ஜன்ம நக்ஷத்திரத்துக்கும் ஒரு காலமும் பொருத்தம் பார்க்கலாகாது.

மேலும் இருவருக்கும் நாம நக்ஷத்திரத்தை கொண்டு பார்ப்பது மிகவும் சிலாக்கியம், தம்பதிகள் சுகமாக வாழ்வார்கள் இன்னும் ஜன்ம நக்ஷத்திரம் தெரியாவிடில் ஸ்திரியின் பெயர் மாற்றி அதற்குள்ள நக்ஷத்திரம் பொருத்தம் சரியாக இருந்தால் விவாஹ செய்யலாம். அப்படி இல்லாவிடில் சொந்த பாத்தியம் விடாமல் அம்மான் அத்தை இவர்கள் சந்ததியாக நேர்ந்தால் தனுதி சுபா சுப பொருத்தங்களைவிசாரியாமல் சகுனுதிகளை மட்டும் கவனித்து விவாஹம் செய்யலாம் என்று பெரியோர்களால் சொல்லப்படுகிறது.

எல்லாவற்றிற்கும் மனம் பொருத்தம் முக்கியம், பிறகு சாதகம் பொருத்தம்.

ஸ்திரி புருஷர்களுடைய சாதகரீதியாக இருவருடைய ஜன்ம நக்ஷத்திரம் தெரிந்தால் தசவிதம் 10 பொருத்தங்களும் பார்த்து இருந்துவிட்டால் மிக்க உத்தமம் சுபத்தைத் தரும்

# தசவித (10) பொருத்தங்களின் விபரம் அதன் பலன்களும்

பொருத்தங்கள்:-

தினம்-சௌபாக்கியம் மங்களம் உண்டாக்கும்.

கணம்-ஐஸ்வர்யம் கொடுக்கும்

மாகேந்திரம்-விசுவாசம் உண்டாக்கும்,

ஸ்திரி தீர்க்கம்-சௌபாக்கியத்தையும் ஆயுளையும் கொடுக்கும்.

யோனி-வெகுபுத்திரர்களை உண்டாக்கும் லாபம் தரும்.

ராசி-குல விருத்தியை உண்டாக்கும்.

ராசியாதிபதி தான்யவிருத்தியை ஏற்படுத்தும்.

வசியம்-வம்சவிருத்தி புத்திரர்கள் போகத்தை கொடுக்கும்

ரஜ்ஜு-மாங்கல்ய விருத்தியை நீடிக்கும்.

வேதை-வெகு புத்திரர்கள் லாபம்.

நாடிபொருத்தம் அநேகர் பார்க்கிறது இல்லை,

குறிப்பு:-

பிராமணர்களுக்கு தினம் } ராசியாதிபதி அவசியம் வேண்டும்.
க்ஷத்திரியர்களுக்கு கணம்
வைசியர் களுக்குராசி
சூத்திரர்களுக்கு யோனி பொருத்தம்

மேலே சொல்லப்பட்ட 10 பொருத்தங்களில்யாவருக்கும் தினம் கணம் யோனி ராசி ரஜ்ஜு முக்கியம்

இதிலும் பிராமணர்களுக்கு தினமும் ராசி யாதிபதி, கணம் ரஜ்ஜு முக்கியம் க்ஷத்திரியர்களுக்கு. 8 பொருத்தங்களும் வைசியர்களுக்கு 6 பொருத்தங்களும் சூத்திரர்களுக்கு 4 பொருத்தங்களும் பொருந்தினால் போதுமானது. விவாஹம் செய்யலாம் ரஜ்ஜு தட்டினால் செய்ய கூடாது என்று சாஸ்திரம் அறிந்த பெரியோர்கள் கூறுகிறார்கள் (ரஜ்ஜு விஷயம் விபரமாக பின்னால் பார்க்கவும்)

இந்த 10 பொருத்தங்களும் சரிவராத போனால் சில நக்ஷத்திரங்களில் சுவாதி மிருகசிரம் மகம் அனுஷம் இந்த நக்ஷத்திரங்களில் புருஷ நக்ஷத்திரமாவது அல்லது ஸ்திரி நக்ஷத்திரமாவது ஒன்றாக இருந்தால் மிகவும் சிலாக்கியமானது என்று சாஸ்திரம் அறிந்த பெரியோர்கள் சொல்லி வருகிறார்கள். பலன் அளிக்கும் அதி உத்தமம் மிகவும் சிலாக்கியம்

ஷை பொருத்தங்களில் பாதிக்கு மேல் பொருத் தங்களிருந்தாலும் யோக பலன்கள் ஆயுர் பாவம் மாங்கல்ய பாவம், புத்திர பாவம் செவ்வாய் தோஷம் பலன்களையும் நன்கு பார்த்து சரியாக இருந்தால்விவாஹம் நடத்திடலாம், தம்பதிகள் சுகமாகவாழ்வார்கள்,

# தினம் பொருத்தங்கள்

சிலர் புருஷ நக்ஷத்திரமுதல் எண்ணவேண்டும், என்கிறுர்கள் இதில் சில பலன்கள் சரிவராது ஆதலால் ஸ்திரி நக்ஷத்திரமுதல்தான் எண்ணவேண்டும்.

ஸ்திரி ஜன்ம நக்ஷத்திரம் முதல், புருஷ ஜன்ம நக்ஷத்திரம் 2 4 6 8 9 11 13 15 17 18 20 24 26 வது ஆனுல் உத்தமம். (12வது நக்ஷத்திரத்தில் 1ம். பாதமும், 14ம் நக்ஷத்திரத்தில் 4ம் பாதமும் 18ம். நக்ஷத்திரத்தில் 3ம் பாதமும் நீக்கி) மற்ற பாதங்கள் மத்திபமம் இதில் சொல்லாததும் அஷ்டம ராசிநக்ஷத்திரங்களும் பொருந்தாது ]இரட்டை பட்ட நக்ஷத்திரங்கள் விசேஷ கபத்தை தரும்)

## தாராபலன்:-

ஒவ்வொருவரும் தாம் பிறந்த நக்ஷத்திரத்திற்கு ஜன்ம நக்ஷத்திரமென்றும் அதுமுதலாக 9 நக்ஷத்திரங்கள் வரையில், முதல்பரியாயம் மெனவும். 10 வது அனுஜன்ம நக்ஷத்திர மென்றும். மறுபடியும் 9வது வரையில் இரண்டாம் பரியாயம் எனவும், 9வது, த்ருஜன்ம நக்ஷத்திரபென்றும், 9வது வரையில் மூன்ரும் பரியாயம் என்றும், இந்த பரியாயம் மூன்றுக்கும்

[1] அஸ்வதி-பரணி-கிருத்திகை-ரோகிணி மிருகசிரம் திருவதிரை-புனர்வசு-பூசம்-ஆயில்யம் முதல் பரியாயம்.

(2] மகம்-பூரம்- உத்திரம்- ஹஸ்தம்-சித்திரை ஸ்வாதி -விசாகம்-அனுஷம்-கேட்டை இரண்டாவது பரியாயம்,

(3) மூலம்-பூராடம்-உத்திராடம்-திருவோணம்- அவிட்டம்-சதயம் - பூரட்டாதி - உத்திரட்டாதி-ரேவதி மூன்ரும் பரியாயம்.

ஷை பரியாயம் மூன்றுக்கும் 1-10-19 அதாவது அஸ்வதி-மகம்-மூலம் என்றபடி-பரணி முதலாகஒவ்வொரு நக்ஷத்திரத்துக்கும் ஜன்மம் அனுஜன்மம் த்ரிஜன்மம் என்று அறியவும்.

இந்த மூன்று பரியாயங்களிலும், 9 நக்ஷத்திரங்களுக்கும் 1வது நக்ஷத்திரபலன் விபரம் (ஜன்மம்) தேகநாசம் 2வது நக்ஷத்திரம், ஸம்பத்து. ஸமபத் துண்டாகும் 3 வது நக்ஷத்திரம் விபத்து ஆபத்துண்யரம், தனநாசம் 6 வது ஸ்ாதகம், காரியாகூலம் 7-வது வதம் நாச முண்டாகும் 8வது மைத்ரம் சிநேக முண்டாகும் 9-வது பரம மைத்திரம் லாபம் தரும் இதன் படி ஒவ்வொருவம்தம் முடையஜன்மநக்ஷத்திர முதல் 1 3 5 7 10 12 வதில் முதல் பாதமும் 14 வதில் 4ம் பாதமும் 16 வதில் 3ம் பாதமும் 19-22ல் 4ம் பாதமும் அதாவது ஜனன மான பாத முதல் 88 வது பாதம் 23வது நக்ஷத்திரம் ஆகும் 25 27 ஏக ராசியானுல் கூடும்பின்ன ராசியானுல் கூடாது. இதில் கண்டவைகளும் எட்டாவது ராசியையுடைய நக்ஷத் திரங்களும் தவிர மற்ற நக்ஷத்திர முடைய தின்த்தில் சகலவிதமான காரியங்களும் விவாஹமும் செய்யதகும்.

குறிப்பு :-

மேற்கூறிய ஒன்பது நக்ஷத்திரங்களுள் தாரா பலன் களில் 3-5-/ ஆவது நக்ஷத்திரங்கள் தோஷ நக்ஷத்திரங்கள் என்றும் 2-1-8 ஆவது நக்ஷத்திரங்கள் மத்தியமம் என்றும் 6-4-9 என்றும் சொல்லப்படு கின்றது.

இதிலும் 3-5-7 நக்ஷத்திரங்கள் புருஷநக்ஷத்திரமாக இருந்து மூன்ரும் பரியாயத்தில் வந்தால் தினப் பொருத்தம் உண்டு. என்றும இரண்டாம் பரியாயத்தில் வரும்போது 12 வது நக்ஷத்திரத்தில் முதல்பாத மும் 14வது நக்ஷத்திரத் தில் நாலாம் பாதமும 16 வது நக்ஷத்திரத்தில் மூன்ருபாத மும் கூடாது மற்ற நக்ஷத்திர பாதங்கள் மத்தியமம். இந்தப்படி பார்த்து தினம் பொருத்தம் கூட்டவும்

## 27-வது நக்ஷத்திரப் (பொருத்தம்)

புருஷ நக்ஷத்திரம் பெண்ணின் நக்ஷத்திரத்து லிருந்து எண்ணும் போது இருவருடைய நக்ஷத்திரமும் ஒரே ராசியில் இருந்தால் தினப் பொருத்தம் உண்டு. பின்ன ராசியாக இருந்தால் விவாஹ பொருத்தமில்லை.

## ஏகதினப் பொருத்தம்:-

ரோகிணி திருவாதிரைபூசம் மகம்விசாகம் ஹஸ்தம் உத்திரம் திருவோணம் ரேவதி இவவ 3 நக்ஷத் திரங்களும் ஸ்திரி புருஷர்களுக்கு ஒரே நக்ஷத்திரமானுல் உத்தமம் (2) அசுபதி கிருத்திகை. மிருகசிசம், புனர்வசு உத்திரம்,சித்திரை அனுஷம் பூராடம் உத்திராடம் இவவ 9 நக்ஷத்திரங்களும் மத்தியமம். மற்ற 9 நக்ஷத்திரங்கள் பொருந்தாது ஸ்திரி புருஷர்சுளுக்கு ஒரே ராசியானுல் புருஷ நக்ஷத்திரம் முந் தினதும் ஷ ஒரே நக்ஷத்திரமானுல் பாதம் முந்தினதும் சுபம் மற்றது பொருந்தாது:

## வைதவை நாசிக நக்ஷத்திர விபரம்

ஸ்திரி நக்ஷத்திரத்திற்கு புருஷ நக்ஷத்திரம் 7-வதும் புருஷ நக்ஷத்திரத்துக்கு ஸ்திரி நக்ஷத்தி ம் 22 வதாக வரு-வத வதவை நாசிகம் என்றும் அப்படிக்கேற்படும் நக்ஷத் திரங்களுள் விவாஹம் செய்யக் கூடாதென்றும் சில நக்ஷத் திரங்கள் செய்யலாம் என்றும் சில நஷற்திரங்கள் கூடா தென்பதற்கு பலனுடன் சொல்லப்படுகிறது.

அதன் விபரம்:-

| பெண் ஆண் | |
|---|---|
| கிருத்திகை-ஆயில்யம்<br>ஆயில்யம்-ஸ்வாவ்<br>சித்திரை-பூராடம்<br>அனுஷம்-அவிட்டம்<br>அவிட்டம்-பரணி<br>சதயம்-கிருத்திகை | இந்த நஷத்திரங்களுக்கு ஏற்படும் வதவை கம் மரணம் சம்பவிக்கும் கூடவே கூடாது. |
| கேட்டை-சதயம்<br>மிருகசிரம்-பூரம்<br>ஹஸ்தம்-மூலம் | தரித்திரம் கூடாது. |
| ரேவதி-திருவாதிரை<br>உத்திரம்-கேட்டை | வைரம் உண்டாகும் கூடாது |

மகம்-விசாகம் (கெட்டபிள்ளை உண்டாகும் மத்தியமம்
விசாகம் திருவோணம் விரோதம் மத்தியமம்
திருவோணம்-அசுபதி ஸ்திரி புருஷர் சண்டை விலகல் கூடாது

ுத்திரட்டாதி-மிருகசிரம் வைதவ்வயம் ஏற்படும் கூடாது.
ுத்திராடத்திற்கு-ரேவதி போகும் உண்டாகும் மத்தியமம்.
ுசுபதி-புனர்வசு | ஸ்திரி பிரஜை உண்டாகும் மத்
வாதி-உத்தமம். | தியமம்.

# வதவை நாசிக நக்ஷத்திரம்

பெண் ஆண்

ருவாதிரை-உத்திரம்
ரம்-அனுஷம்
சம்-சித்திரை
} சுகத்தை தரும் சேர்க்கலாம் உத்தமம்.

னர்பூசம்-ஹஸ்தம் வம்சவிருத்தி உத்தமம்.

ராஹிணி-மகம்
ரட்டாதி-ரோஹிணீ
லம்-பூரட்டாதி
} புத்திரலாபம் உத்தமம் சம்பத்து உண்டாகும் உத்தமம்,

ராடம்-உத்திரட்டாதிவிசுவாசம் விருத்தி உத்தமம்
ரணி-பூசம் சௌக்கியம் உத்தம்ம்.

குறிப்பு:-

முன் சொன்ன நக்ஷத்திரம் ஸ்திரி நக்ஷத்திரமும் பின்சான்ன நஷத்திரம் ஆண் நஷத்திரமாக கணக்கிடவும் தன்படி சுபா-சுப பலனை அறிந்து விவாஹம் செய்விக்கலாம் மேலும் தினம் பொருத்தம் பார்க்கும் விஷயங்களில் சில க்ஷத்திரங்கள் கூடும் என்றும் சில நக்ஷத் திரங்கள் கூடாது ன்றும் அநேகர் சொல்லி விவாஹத்தை கெடுத்து விடுகிறார் ள். அதாவது பரணி உத்திராடம் அவிட்டம் மூலம், சாகம் ஆயில்யம் கேட்டை இவைகளில் (பெண் நக்ஷத் ரங்களில்) பரணியில் பிறந்தவள் தரணியாவாள் உத்தி டத்திற் பிறந்தவள் சிரேஷ்ட மானவள் அவிட்டத்தில் றந்தவள் தவிட்டை தொட்டாலும் பொன் மற்ற நஷத் ரங்களில் பெண்மூலம் முதல் பாதமானுல் மாமனுருக்கும் யில்யம் முதல்பாதமானுல் மாமியாருக்கும் கேட்டை முதல் தமானுல் மூத்த சகோதரனுக்கும் விசாகம் 4ம் பாதமானுல் ளைய சகோதரனுக்கும் தோஷம் கூடாது ஷ நஷத்திரங் ள் புருஷ நஷத்திரமானுல் தோஷமில்லை விவாஹம் சய்யலாம். ஆண் மூலம் அரசு ஆளும் ஒரு பெண் மூலம் க்ஷத்திரத்தில் பிறந்தால் அவளுடைய தகப்பன் சீக்கிரம் றப்பான்.

குறிப்பு:-

மேல் சொல்லிய நஷத்திரங்களில் தினப்பொருத்தத்தில் பெண்சாதகப்படி தோஷம் இருந்தாலும் மற்த இருவருடைய சாதகப்படி யோகபாவம் ஆயுர்பாவம் மாங்கல்ய பாவம் இவைகள் சரியாகஇருந்தால் இந்த நஷத்திர அபவாதம் விலகிவிடும் பார்த்து கூட்டவும்.

# கணம்-பொருத்தம்

அசுபதி-மிருகசிரம் புனர்வசு-பூசம்-ஹஸ்தம். சுவாதி-அனுஷம்-திருவோணம்-ரேவதி இந்த 9 நஷத்திரங்களும் தேவகணம்.

பரணி-ரோகிணி - திருவாதிரை-பூரம்-உத்திரம் - பூராடம்-உத்திராடம் - பூரட்டாதி-உத்திரட்டாதி இந்த 9 நக்ஷத்திரங்களும் மனுஷயகணம்.

கிருத்திகை - ஆயில்யம் - மகம்-சித்திரை - விசாகம் கேட்டை மூலம்-அவிட்டம்-சதயம் இந்த 9 நக்ஷத்திரங்களும் ராக்ஷசகணம்.

ஸ்திரி புருஷர்களுக்கு ஒரே கணமானல் உத்தமம் பெண் மனுஷகணமாலும் புருஷன் தேவகணமானலும் உத்தமம் சேர்க்கலாம்,

ஸ்திரி தேவகணம் புருஷன் மனுஷ கணம்மத்திபம் ஸ்திரி மனுஷகணம் புருஷன் ராஷசகணம் ஆனல் அதமம் ஸ்திரிராஷசகணம் புருஷன்மனுஷ கணமானல் கூடாது,

ஸ்திரி ராஷ்சகணம் புருஷன் மனுஷகணமாக இருக்கும் போது புருஷ நஷத்திரம் 14க்கு மேல் ஸதிரி நக்ஷத்திரம் வருமாகில் ஸ்திரி ராஷசம் இல்லே, விவாஹம் செய்பலாம் பலன் சோபனகரம்.

# மாகேந்திரம் :-

ஸ்திரி ஜன்ம நஷத்திரம் முதல் புருஷ ஜன்மநக்ஷத்திரம் வரை எண்ண 4-7-10-13-16-19 22. 25-வது ஆக வந்தால் பொருந்தம் இல்லாவிடில்பொருந்தாது. பலன் புத்திர விருத்தி ஆயுள் ஆரோக்கியம் உண்டாகும்.

## ஸ்திரிதீர்க்கம்:-

ஸ்திரி ஜன்மநஷத்திரமுதல் புருஷஜன் மநஷத்திரம் வரை எண்ண 13க்கு மேல்புருஷ நஷத்திரம் வந்தால் உத்தமம் 7க்கு மேல் மத்தியமம் மற்றவை பொருந்தாது பலன் இது சகல சம்பத்தை தரும்.

## யோனிபொருத்தம்:-

ஆண் பெண்

அஸ்வதி-சதயம்-குதிரை
பரணி-ரேவதி-யானை
பூசம்-கிருத்திகை-ஆடு
ரோகிணி-மிருகசிரம்-பாம்பு
திருவாதிரை-மூலம்-நாய்
ஆயில்யம்-புனர்வசு-பூனை
மகம்-பூரம்-எலி
உத்திரம்-உத்திரட்டாதி-எருது-பசு
ஸ்வாதி-அஸ்தம்-கிடா-எருமை
சித்திரை-விசாகம்-புலி
கேட்டை-அனுஷம்-மான்
பூராடம்-திருவோணம்-குரங்கு
அபிஜித்-உத்திராடம்-கீரி
உத்திராடம் -மலட்டுப்பசு
பூரட்டாதி-அவிட்டம்-சிம்மம்

ஷெ கண்ட நஷத்திரங்களில் முன் சொன்னது ஆண் நஷத்திரமும் பின் சொன்னது பெண் நஷத்திரம் இவற்றில்.

## சத்துரு

பசுவுக்கு-புலி
குதிரைக்கு-ஆடு
ஆட்டுக்கு ] புலி
மாட்டுக்கு ]
பூனைக்கு-எலி நாய்
எலிக்கு-பாம்பு பூனை
யானைக்கு-சிம்மம்
பாம்புக்கு-பூனை கீரி
இவைகள் வைரமாம் (சத்துரு சேர்க்கக்கூடாது)

மானுக்கு-பசு ] நட்பு
ஆட்டுக்கு-குதிரை ] சமத்தவும்
நாய்க்கு-மனுஷன் ] சேர்க்கலாம்

குரங்குக்கு எல்லா யோனிகளும் நட்பு

இதுகளில்சத்துருமித்துரு யோனி அறிந்துசேர்க்க உத்தமம்,

ஸ்திரி புருஷ நக்ஷத்திரங்களுக்கு ஒரே யோனி யானாலும் மித்திர யோனியானாலும் சமத்துவமானாலும் உத்தமம் சேர்க்கலாம் சத்துரு யோனி பொருந்தாது. இரண்டும் புருஷ யோனியானாலும் உத்தமம். இரண்டும் ஸ்திரி யோனியாகில் மத்தியமம் புருஷன் புருஷயோனியும் ஸ்திரி ஸ்திரியோனியுமாக இருந்தால் சிலாக்கியம் ஸ்திரி புருஷயோனியும் புருஷன் ஸ்திரியுமாக மாறிவந்தால் வீட்டில் சர்வதா கலகம் கூடாது.

## ராசிபொருத்தம்:-

ராசிப்பொருத்தம் என்பதுராசிசக்கரத்தில் (சாதக குறிப்பில்) அவரவர்களுடைய நக்ஷத்திரத்திற்குறிய சந்திரன் நின்ற ராசிக்கு பெயர் இதுமுதல் எண்ண ஸ்திரிராசிக்கு புருஷராசி 2-12 ஆனால்மிருத்யுகூடாது. 12-2 ஆனால் ஆயுள்விருத்தி உத்தமம். 3-11 ஆனால் துக்கம் கூடாது. 11-3 ஆனால் சுகம் உத்தமம் 4 10 ஆனால் தனவிருத்தி

உத்தமம் 10-4 ஆனுல் தன விருத்தி உத்தம 6-8 ஆனுல் புத்திரநாசம் கூடாது. 8-6 ஆனுல் புத்திரலாபம் உத்தமம் 7-7 ஆனுல்சம சப்தமம மாங்கல்யமும் ஆயுளும் விருத்தி உத்தமம் ஸ்திரி ராசிக்குபுருஷராசி 2-12வதாகவருவதில் மீனம் முதல் சமராசியாகிலும் உத்தமம் மேஷாதி சமராசி னாகில் கூடாது அதாவது ஸ்திரிராசிக்கு புருஷராசி மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பராசியாகில் இரண்டா வதாகவரில் தோஷமில்லே. விவாஹம் செய்யலாம் உத்தமம் ஷஷ்டாஷ்டகத்தில் மேஷத்திற்குகன்னியும் தனுசுக்கு விரு ஷமும் துலாத்திற்குமீனமும் கும்பத்திற்கு கடகமும் சிம் மத்திற்கு மகரமும் மதுனத்திற்கு வருச்சிகமும் இதுகளில் ஸ்திரிராசிக்கு புருஷராசி விருஷபம் கடகம் கன்னி வருச்சிகம் மகம் மீனம் இந்த ராசி ஆருவது ராசியாகில் சுப ஷஷ்டா ஷ்டகம் சுபத்தை தரும் விவாஹம் செய்யலாம்.

கடகத்துக்கு கும்பமும் மகரத்துக்கு சிம்மமும் மீனத்திற்கு துலாம் விருச்சிகத்துக்கு மிதுனம் விருஷபத்திற்கு தனுசும் கன்னிக்குமேஷம் இதுகளில் ஸ்திரி ராசிக்கு புருஷராசி மேஷம் மிதுனம் சிம்மம் துலாம் தனுசு கும்பம் இந்தராசிகள் 8 (எட்டாவதாகில்) ஆனுல் சுகாஷ்டகம் சுகத்தை தரும். சேர்க்கலாம் உத்தமம் கடகத்துக்கு தனுசும் விருச்சிகத்துக்கு மேஷம் கன்னிக்கு கும்பம் விருஷபத்திற்கு துலாம். மகரத்து க்கு மிதுனம் இந்தஷஷ்டாஷ்டகத்தில் ஸர்வ நாசம் சேர்க்க கூடாது அசுபத்தை தரும்.

இந்தபடி ஸ்திரி புருஷராசியாகிய 2-5-6-8-9-12 ஆகிலும் ஸ்திரிராக்ஷசகணமானுலும் இரண்டுராசிக்கு ஒரே கிரஹாதிபதியானுலும் (சிநேகம்) நட்பு ஆனுலும் உச்ச கிரஹ பார்வை அடைந்தாலும் இருந்தால் விவாஹம் செய்ய லாம் உத்தமம் ஏகாதிபதியானுலும் மித்திரராகிலும் ஸம சப்தமாகிலும் ரஜ்ஜு வேதை கணம் இதுகளன்னியில் விவா ஹம் செய்யக்கூடாது மகரம் கடகம் கும்பம் சிம்மம் இந்த ராசிகள் ஸமசப்தமாயிருந்தால் விவாஹத்தில் வைதவ்யம்

13

(அமங்கல்யம்) என்று சொல்லுவதால் சேர்க்கக் கூடாது. மேஷத்திற்கும், சிம்மந்திற்கும், கடகத்துக்கும் விருச் சிகத்துக் கும் 6-8 என்ற தோஷமில்லை. விவாஹம் செய்யலாம். பலன் ராசிபொருத்தம்) வம்ச விருத்தியை தரும்.

## ராசியாதிபதி பொருத்தம்:-

ஸ்திரி புருஷராசியாதிபதிகள் ஒருவருக்கொருவர் மித் திரர்களானுல் அதமம் உத்தமம்சமமானுல் மத்திமம் சத்துரு மித்திரர்களானுல் அதமம் இருவரும் சத்துருவானுல் மிகவும் தோஷம் இந்தபலன் சுபமாக இருந்தால் புத்திரர்கள் சுகமா கவும் தீர்க்காயுளாகவும் இருப்பார்கள். இந்தபொருத்தம் முக்கியமாக பிராமணர்களுக்கு தேவை.

## ராசிகளின் அதிபதிகள்:-

மேஷத்துக்கு-விருச்சிகத்துக்கு செவ்வாய்

விருஷகம்-துலாத்துக்கு சுக்கிரன்

மிதுனம்-கன்னிக்கு புதன்

கடகத்துக்கு-சந்திரன்

சிம்மத்துக்கு-சூரியன்

தனுசுக்கு-மீனத்துக்கு குரு

மகரத்துக்கு-கும்பத்துக்கு சனி

இவர்களின் சத்துருசமம் மித்துருகீழ்கண்டபடிபார்க்க



# நவக்கிரகங்களின் சத்துரு மித்துரு சமம் அட்டவணை

| கிரஹம் | | | |
|---|---|---|---|
| 1 | மித்துரு | சத்துரு | சமம் |
| சூரியன் | சந்தி - செவ் குரு | சனி - சுக்கிரன் | புதன் |
| சந்திரன் | சூரி புதன் | —— | செவ் - குரு சுக்கிரன் - சனி |
| செவ்வாய் | சூரிய - குரு சந்திரன் | புதன் | சனி - சுக்கிரன் |
| புதன் | சூரிய - சுக்கி | சந்திரன் | குரு - சனி புதன் |
| குரு | சூரிய - சந்தி செவ்வாய் | புதன் - சுக்கிர | சனி |
| சுக்கிரன் | புதன் - சனி | சூரிய - சந்திர | செவ்வா - குரு |
| சனி | புத - சுக்கிர | சூரிய - செவ் சந்திரன் | குரு |

## வசிய பொருத்தம்-:

| | | | |
|---|---|---|---|
| மேஷத்திற்கு | -சிம்மம் - விருச்சிகம் | - | வஸ்யம் |
| விருஷபத்திற்கு | -கடகம் - துலாம் | - | வஸ்யம் |
| மிதுனத்துக்கு | -கன்னி - | - | ஷை |
| கடகத்துக்கு | -தனுசு -விருச்சிகம் | - | ஷை |
| சிம்மத்துக்கு | -துலாம் - | - | ஷை |
| கன்னிக்கு | -மீனம்-மிதுனம் | - | ஷை |
| துலாத்திற்கு | -மகரம்- - | - | ஷை |
| விருச்சிகத்திற்கு | -கன்னி-கடகம் | - | ஷை |
| தனுசுக்கு | -மீனம்- - | - | ஷை |
| மகரத்திற்கு | -மேஷம்-கும்பம் | - | ஷை |
| கும்பத்திற்கு | -மேஷம்- - | - | ஷை |
| மீனத்திற்கு | -மகரம் - - | - | ஷை |

குறிப்பு:-

ஸ்திரி ராசிக்கு புருஷராசி வஸ்யம் ஆனல் உத்தமம். புருஷராசிக்கு ஸ்திரிராசி வஸ்யமானுல் மத்தியமம் இருவருடைய ராசி சரியாக இருந்தால் போகம் மிகும் பலன் சுபம்.



## ரஜ்ஜுபொருத்தம்-

ஸ்திரி புருஷ நக்ஷத்திரங்கள் ஒரே ரஜ்ஜுவாகில் பொருந்தாது பின்னர் ரஜ்ஜுவாக இருந்தால் பொருந்தும் அதிலும் இரண்டும் ஏறுமுகமாக இருக்கவேண்டும். இரண்டும் இறங்கு முகத்திலிருந்தால் ஸ்திரி நாசம் கூடாது. ஒன்று ஏர் முகத்திலும் மற்றென்று இறங்கு முகத்திலிருந்தாலும் ஒரே ரஜ்ஜுவானாலும் பொருத்தம் உண்டு, விவாஹம் செய்யலாம். சிலர் சிரோரஜ்ஜு கண்டரஜ்ஜு தவிர மற்ற ரஜ்ஜுகள் ஒரே வரியில் இருந்தாலும் ஏறும் இறங்குமுகமாக இருந்தாலும் மற்றபொருத்தங்கள் சரியாக இருந்தால் விவாஹம் செய்கிறார்கள் சௌக்கியமாகவும் வாழ்கிறார்கள் சிர-கண்டரஜ்ஜு உதவவே உதவாது. இருவருக்கும் நாசத்தை கொடுக்கும் சிரோ ரஜ்ஜுவானல் புருஷனுக்கு கண்டம் கண்ட ரஜ்ஜுவானல் ஸ்திரிக்கு ஆகாது. சிரோரஜ்ஜு உதவவே உதவாது.



...அட்டவணை.

ஆரோகணம் அவரோஹணம் ஆரோஹணம் அவரோஹணம் (ஆரோ-அவரோஹண)

| மிருகசிரம் | | சித்திரை | | அவிட்டம் | | சிரசு |
|---|---|---|---|---|---|---|
| ஆரோ கணம் ரோகிணி | அவரோ கணம் திருவாதிரை | ஆரோ கணம் ஹஸ்தமி | அவரோ கணம் ஸ்வாதி | ஆரோ கணம் திருவோணம் | அவரோ கணம் சதயம் | ண்டம் |
| கிருத்திகை | புனர்வசு | உத்திரம் | விசாகம் | உத்திராடம் | பூரட்டாதி | ரஜ்ஜு (கழுத்து) நாபி |
| பரணி | பூசம் | பூரம் | அனுஷம் | பூராடம் | உத்திரட்டாதி | தொப்புளு உளரு |
| அசுபதி | ஆயில்யம் | மகம் | கேட்டை | மூலம் | ரேவதி | துடை பாதம் ரஜ்ஜு |

குறிப்பு :— ● - ஏறுமுகம் ● - இறங்குமுகம்

இரண்டு நக்ஷத்திரங்களில் ஒன்று ஏறுமுகம் ஒன்று இறங்குமுகம் ஒரே வரியில் இருக்கிறது

# ரஜ்ஜு பொருத்தம் பலன்

இரண்டும் உளரு (துடை) ரஜ்ஜுவானல் தன நாசம் [நா]பி (தொப்புளு) ரஜ்ஜுவானல் புத்திர தோஷம் பாதரஜ்[ஜு]மவானல் தம்பதிகள் வெளி தேச சஞ்சாரம் (வாசம் [செ]ய்கையால் ஏகரஜ்ஜுவானல் விவாஹம் செய்யக்கூடாது [மத்]ன ரஜ்ஜுவானல் மங்களகரம் மாங்கல்ய விருத்தியை [கொ]டுக்கும் ஒன்பதுபொருக்தங்கள் சரியாக இருந்தாலும் [ர]ஜ்ஜு பொருத்தம் சரியில்லாவிட்டால் விவாஹம் செய்யக் [கூ]டாது. இது முக்கியம் கூடுமானவரை பார்த்து விவாஹம் [செ]ய்யவும்.

## வேதை பொருத்தம்:-

| | |
|---|---|
| [அ]ஸ்வனி-கேட்டை<br>[ப]ணி-அனுஷம்<br>[கி]ருத்திகை-விசாகம்<br>[ரோ]கிணி-சுவாதி<br>[தி]வாதிரை-திருவோணம்<br>[பு]ர்வசு-உத்திராடம்<br>[பூச]ம்-பூராடம்<br>[ஆ]யில்யம்-மூலம்<br>[மக]ம் ரேவதி<br>[பூர]ம்-பூரட்டாதி | மேற்கூறிய இரண்டு இரண்டு நக்ஷத்திரங்களுக்குள் ஒன்றுக்கொன்று வேதையாம் மிருகசிரம் சித்திரை சுவாதி இவைகளும் ஒன்றொன்றுக்குள் வேதை எனப்படும் |

மேல் சொல்லிய இரண்டு இரண்டு நக்ஷத்திரங்களுக் [குள்] ஸ்திரிபுருஷ நக்ஷத்திரமாகில் பொருந்தாது. மாறிவரில் [பொ]ருந்தும் தம்பதிகளுடைய நக்ஷத்திரங்கள் வேதை நக்ஷத் [திரங்]களில் சேர்ந்திருக்க கூடாது பரஸ்பரம் வேதையுண் [டா]யிருந்தால் ஸ்திரி துக்கத்தையும் அமங்கல்யத்துவமும் [அ]டைவாள் வேதை பொருத்தம் அனுகூலமாக யிருக்கில் [ச]கலவிதமான தோஷங்களும் நிவர்த்தியாகும். தம்பதிகள் [எக்]காலத்திலும் சுகிலும் சிகிகளாகவும் மனசு சந்துஷ்டியா[க] வாழ்வார்கள் தினம் மகேந்திரம் கிரஹ பொருத்தம்

ரஜ்ஜு நாடி இந்த ஐந்து பொருத்தங்களும் பொருந்திருந்தால் இந்த வேதைபொருத்தம் குற்றமாக இருந்தால் தோஷமில்லை

(நாடிப் பொருத்தம் தென்தேசத்தில் கவனிக்கிறதில்லை)

## கிரஹப் பொருத்தம்:-

ஸ்திரி புருஷர்களுடைய ஜன்மநக்ஷத்திரத்துக்கு 1-7-8ல் பாபகிரகள் அதாவது செவ்வாய் ராகு கேது சனி இவர்கள் சத்துரு நீசமாகயிருந்தால் முழு பலம் மித்துருவீடாகில் முக்கால்பலம் ஸ்வக்ஷேத்திர மானுல் அறைபலம் உச்சமானுல் கால்பலம் 2 4-12ல் சத்துரு கிரஹம் நீசனுகயிருந்தால் அரைபலம் மித்திர வீடாகில் காலே அரைக்கால் பலம் ஸ்வக்ஷேத்திரமாகில் கால்பலம் உச்சவீடாகில் அரைக்கால் பலம் சந்திர ராசியை தொட்டு மேற்சொன்ன பாபத்தில் பாதியும் சுக்கிரன் நின்ற ராசியைதொட்டு கால்பங்குமாம் பெண் சாதக பாபத்திற்கு புருஷசாதகபாபம் குறைந்தால் பொருந்தாது. சமமாவது அதிகமாவது இருந்தால் பொருந்தும் மேற்சொல்லிய பாபங்களுக்கு சுப கிரஹ பார்வை ஏற்பட்டால் தோஷமில்லை.

குறிப்பு:—லக்கினத்திலிருந்து எண்ணி கணக்கிடமுழு பலத்திற்கு ஒன்று என்று வைத்துக் கொள்ளவும் மற்றபடி கணக்கிடவேண்டும்.

## ஆயுள் பொருத்தம்:-

பெண்ணினுடைய நக்ஷத்திரமுதல் புருஷனுடைய நக்ஷத்திரம் வரையில் எண்ணின தொகையையும் புருஷனுடைய நக்ஷத்திரமுதல் பெண்ணினுடைய நக்ஷத்திர வரையில் எண்ணின தொகையையும் தனி தனி ஏழில் பெருக்கி 27ல் வகுக்க மிச்சம் பெண்ணினுடைய நக்ஷத்திரத்தினின்றும் எண்ணப்பட்ட தொகை. குறையில். ஆயுட்பொருத்த

பொருந்தும் புருஷனுடையநாளினின்றும் எண்ணப்பட்ட தொகை குறையிற் பொருந்தாது: இந்தப்படி மேலேசொல்லப் பட்ட பொருத்தங்களை நன்கு பார்த்து விவாஹம் செய் விக்கலாம் மேலும் இன்னும் சிலபொருத்தங்கள் இருக்கின் றன. அதாவது விருக்ஷங்கள் பொருத்தம் பட்சி பூத வருணபொருத்தம் என்று இருக்கின்றன அவைகளை அநேகர் அனுசரிப்பதில்லை ஸ்திரிஜாதகத்திற்கு முற்கூறியவாறே 7ம் இடத்தை கவனிப்பதுடன் 8ம் இடத்தை பன்முறை பார்க்க வேண்டும் அந்த இடத்திற்கு சுப திருஷ்டிமிக நன்று பாப திருஷ்டிமிக்க தோஷம் அத்தலங்களில் சூரியன் குரு செவ் வாய் கேது இவர்களிருந்தாலும் நோக்குதலும் கூடாது அதினின்றும் செவ்வாயை மிகவும் கவனிக்க வேண்டும். செவ்வாய் சூரியன் சேர்ந்து இருக்க கூடாது. சனிபார்வை மிகவும் தோஷத்தைதரும் ஸ்திரி புருஷர்களின் ஜாதகத்தை யொத்து பார்க்குங்கால் குரு தோஷம் சமமாயின்நன்று ஸ்திரி தோஷம் கொஞ்சம் மிகுதியாயினும் கூடாது புருஷசாதகம் அது போலாயினும் செய்யலாம்.

# செவ்வாய் தோஷம் விபரம்

ஸ்திரி புருஷசாதகத்தில் விவாஹம் காலத்தில் இருவருக் கும் செவ்வாய் தோஷமும் கவனிக்கவேண்டும்

இனி செவ்வாய் தோஷம் விபரம் ஆராய்வோம்

செவ்வாய் தோஷம் என்பது ஸ்திரி புருஷர்கள் ஜாத கத்தில் அங்காரகன் (செவ்வாய்) லக்கினத்திற்கு 2-4-7-8 -12 ஆகிய இடங்களில் இருவருக்கும் இருப்பின் தோஷம் உண்டு ஒருவருக்கு இருந்து மற்றொருவருக்கு இல்லாமலிருந் தால் விவாஹம் செய்யலாகாது இருவருக்கும் சமமாக இருந் தால்விவாஹம் செய்யலாம் உத்தமம் அதிலும் புருஷர்களுக்கு 2 7 லும் ஸ்திரிகளுக்கு 4 12 லும் இருவர்கட்கும் 8 லும் அங் காரகளிருந்தால் தோஷம் உண்டு மேலும் ஜன்ம லக்கினம் சுக்கிரலக்கினம் இம்மூன்றுக்கும் 2 4 7 8 12 இந்தஸ்தானங் களில் செவ்வாய் புருஷனுடைய ஜாதகத்திலிருக்கில் புருஷ

ஙிறந்து விதவையாவாள் ஷெ செவ்வாய்தோஷம் அவர்களின் ஜாதகப்படி செவ்வாய் திசை வரும்போது அவரவர்களுக்கு கண்டமோ வியாதியோ அல்லது மரணமோ உண்டாக்கும் ஆதலால் இருவருடைய ஜாதகத்தை சோதித்து இருவருக்கும் செய்வாய் திசை வென்றுவிட்டதா என்று பார்த்தும் சேர்க்கவேண்டும் செவ்வாய் தோஷத்திற்கு சில பரிகாரங்கள் கூறப்பட்டிருக்கிறபடியால் அதன்படி பார்த்து தம்பதிகளின் விவாஹத்தை கூட்டினுல் அவரவர்களுடைய இதர யோக பலத்தினுல் இந்த செவ்வாய் தோஷம் பாதிக்காது

அவையானவை:-

1 இருதிரத்தாருக்கும் மிதுனம் கன்னி 2ம் இடமாகி அதில் அங்காரகன் இருந்தால் தோஷம் இல்லை

2 விருஷபம் துலாம் ஆகிய இவற்றில் ஒன்து 12ம் இடமாகி அதில் அங்காரகன் இருந்தால் தோஷம் இல்லை

3 மேஷம் விருச்சிகம் ஆகிய இவற்றில் ஒன்று 4ம் இடமாகி அதில் அங்காரகன் இருந்தால் தோஷமில்லை

4 மகரம் கடகம் ஆகிய இவற்றில் 7ம் இடமாகி அதில் அங்காரமன் இருந்தால் தோஷமில்லை

5 தனுசு மீனம் ஆகிய இவற்றில் ஒன்று 8ம் இடமாகி அதில் அங்காரகன் இருந்தால் தோஷமில்லை

6 கும்பம் சிம்மம் இதில் அங்காரகன் இருந்தால் தோஷம் இல்லை

அங்காரகன் சந்திரனுடனும் அல்லது குரு புதனுடன் சேர்ந்சேரவது பார்த்தாலும் தோஷமில்லை

8 அங்காரகன் சுயக்ஷேத்திரமாகிய மேஷம் விருச்சிகத்தி ல் சுய நவாம்சங்களிலிருந்தாலும் புதன் சந்திரன் சுக்கிரன் குரு இவர்களுடன் (ஒருவருடன்) கூடியாவது அல்லது பார்வை பெற்று இருந்தாலும் தோஷமில்லை

9 குரு சந்திரன் இராசியாகிய சிம்மம் கடகம் லக்கினத்தில் பிறந்தவர்களுக்கு அங்காரகன் தோஷமில்லை

10 ஸ்திர சர இராசிகளாகிய கடகம் சிம்மம் மேஷம் விருச்சிகம் மகரம் ராசிகளை அடைந்த செவ்வாய்க்கு தோஷமில்லை (நிவர்த்தி)

11 செவ்வாய் இருக்கும் ராசிநாதன் தன் செவ்வாய்க்கு கேந்திர கோணங்களிலிருந்தால் செவ்வாய் தோஷ பரிகாரம் இந்தப்படி பார்த்து விவாஹம் செய்வது உத்தமம்

# ஸ்திரீ ஜாதகம்

இனி ஸ்திரி ஜாதக பலனை அவர்கள் குறிப்பு வைத்க்கி கொண்டு வாழ்நாளில் பிற்காலத்தில் நடக்கும் பலனை ஆராய்வோம்

முக்கிய அறிவிப்பு

ஸ்திரி சாதகத்தில் ஆண்களுக்கு சொன்ன பலன்கள் யாவும் ஸ்திரிகளுக்கும் சொல்லப்படுகிறது இருந்தாலும் முக்கியமாக விவாஹ காலத்தில் ஜோடி சேர்ப்பதில் இருவருடைய சாதகத்தில் 7 ம் இடம் 8 ம் இடம் முக்கியமாக கவனிக்க வேண்டும் ஷ ஸ்தானங்கள் சுத்தமாக இருப்பது நல்லது ஷ ஸ்தானங்களில் சுபகிரஹ சேர்க்கை சுபதிருஷ்டியுள்ள சாதகமாககூடுமனவரையில்பார்த்து விவாகம் செய்யவும்ஷஸ்தகனங்களில் பாப கிரஹங்களாகிய செவ்வாய் சனி குரு கேது இவர்கள் சேர்ந்தாவது இருந்தல் கூடாது அதிலும் சூரியன் செவ்வாய் சனி கூறுயிருக்ககூடாது சூரியன் மட்டும் இருக்கலாம்

அப்படி பாப கிரஹங்கள் இருவருடைய சாதகத்தில் சமத்துவமாக இருந்து சுப திருஷ்டி இருந்தால் விவாஹம் செய்யலாம் பாபகிரஹங்கள் ஷ 7ம் 8ம் இடங்களில் இருந்து தம்பதிகள் ஜோடி சேர்ந்தால் அந்தந்த பாபகிரஹ திசா புத்திகாலங்களில் கண்டம் விதவை தன்மை வியாதி தரித்திரம் இத்தியாதிகளை தம்பதிகள் அடைவார்கள் நான் இந்த புஸ்தகத்தில் சுருக்கமாக முக்கியமான விஷயங்களை மட்டும் எழுதியிருக்கிறேன் யாவரும் படித்து பார்த்து கூடுமான வரையில் விவாஹ காலத்தில் பாப கிரஹ சம்பந்த மன்னியில் ஜோடி சேர்க்கவும்

# ஸ்திரி ஜாதகம் (பொது விஷயம்)

ஒரு புருஷ சாதகத்திற்கு என்ன பலன்கள் சொல்லப்படுகிறதோ அதே பலன்கள்தான் பெண் சாதகத்திலும் சொல்லப்படுகிறது ஆண்களுக்கு ஆண் சாதகத்தை அனுசரித்து

சொல்லியிள்ள பலாபலன்கள் யாவும் பெண் சாதகத்தை அனுசரித்து சொல்லினுல் பெண்களுக்கு பொருந்தக்கூடிய விஷயங்கள் மாத்திரம்தான் பெண்களுக்கு பலிக்கும் மற்றவை அதாவது பெண்களுக்கு பொருந்தாதவை அவர்களுடைய புருஷர்கள் சேர்ந்து அனுபவிப்பார்கள்

இலக்கினம் சந்திரலக்கினம் இவ்விரண்டில் எது வலுவாக இருக்கின்றதோ அதை அனுசரித்து ஸ்திரிகளுக்கு நேரிடும் நல்ல பலன்கள் அல்லது இரண்டு கலந்து இருந்ததை அறியவேண்டும்

ஸ்திரிகளுக்கு அவர்களுடைய சாதகத்தில் ஜன்ம லக்கினம் வலுவாக இருந்தால் ஜன்ம லக்கினத்தைக் கொண்டும் சந்திர லக்கினம் வலுவாக இருந்தால் சந்திர லக்கினத்தைக் கொண்டும் அவர்களுடைய சௌந்தர்யம் பலம் குணம் அதிஷ்டம் இவைகளை அறிய வேண்டும் முக்கியமாக 2ம் இடம் 4ம் இடத்தால் சங்கம் குடும்பம் வாழ்வையும் 5ம் இடத்தை கொண்டு குழந்தைகள் எத்தனை என்றும் அவைகளில் ஆண் முன்பா பெண் முன்பா என்பதும் 7ம் இடத்தை கொண்டு பர்த்தாவின் குணம் சௌக்கியம் பர்த்தாவினுல் ஸ்திரி அடையும் சௌபாக்கியம் சுகமும் பர்த்தாவை ஸ்திரி விடுவதும் 8ம் இடத்தை கொண்டு விதவையாகும் யோகமும் 9ம் இடத்தால் புத்திரபேறும் கூறுவர் இவைகளில் 7ம் 8ம் இடம் இவ்விரண்டும் சுத்தமாக இருந்தால் மிக நல்லது

ஆதலால் ஆண் பெண் சாதகங்களை விவாஹத்தில் ஒன்று பார்த்து ஜோடி சேர்க்க வேண்டியிருப்பதால் ஸ்திரி சாதகமும் அவசியமாக இருக்கிறது

## பாவ பலன்கள்

புருஷ சாதகப்படி எந்த பலன்கள் சொல்லப்படுகிறதோ இவை யாவும் ஸ்திரிக்கும் பார்க்கவேண்டும் அதிலும் லக்கினம் சந்திரலக்கினம் இரண்டும் இரட்டை ராசியாக இருந்

தால் பெண் சுருபமாகவும் ஒற்றை ராசியாக இருந்தால் ஆண் சுருபமாகவும் ஒன்று இரட்டை ஒன்று ஒற்றை ராசியாக இருந்தால் கலந்தால் ஸ்வாபமாக ஜாதகி இருப்பாள் மேலும்

1 லக்கின பாவத்தால் சாதகியின் தேகம் குணம் பலமும் சந்திர லக்கின பாவத்தால் சௌந்தர்யம் ரூபம் அழகு இவைகளை அறியலாம்

2 இரண்டாம் பாவம்-குடும்பம்.

3 மூன்றும் பாவம்-சகோதரர்கள்

4 நான்காம் பாவம்-சுகம் கற்பு சங்கமம்

5 ஐந்தாம் பாவம்-புத்திரன்

6 ஆருவது பாவம்-சத்துரு

7 ஏழாவது பாவம்-பர்த்தா பாக்கியம் வாழ்வு சுகம் கணவனின் பலம் உத்தியோகம் ஸ்ரேஷ்டம்

8 எட்டாவது பாவம்-மாங்கல்யஸ்தானம் ஆயுள் பர்த்தாவின் ஆயுள் பலம்

9 ஒன்பதாவது பாவம்-புத்திரர் [பர்த்தா ஸ்ரேஷ்டம்.

10 பத்தாவது பாவம்-ஆயுர்பலம்

11 பதினொன்ருவது பாவம்-லாபஸ்தானம்

12 பனிரெண்டாவது-விரயம் சுகம் சயனஸ்தானம்

ஷை சொல்லப்பட்ட பாவாதிபதிகள் ஷை கண்ட பலன்களை அளிப்பார்கள் தவிர ஷை பாவாதிபதிகள் நிற்கும் நிலையை அறிந்து பலன்களை கூறவேண்டும்

காரகர்கள்

குரு பர்த்தா காரகன்

சுக்கிரன் :-தனகாரன் களத்திரகாரகன்

சுக்கிரன் தனகாரனும் களத்திரகாரகனும் ஆவான் முக்கியமாக 2 4 5 7 8 9 10 இந்த இடங்கள் சுத்த மாசுவாவது சுப இடங்களாவது சுப பார்வையாது அல்லது சுப சேர்க்கை உச்சம் கேந்திரம் திருகோணம் ஸ்தானங்களாவது இருத்தல் வேண்டும் லக்கினதியும் சுபதிருஷ்டி அடைந்து இருக்க நல்லது ஷை கண்ட இடங்களில் சுப கிரஹசம்பந்தம் இருக்கில் சுபமென்றும் அசுப கிரஹமிருப்பின் அசுபம் என்றும், அறிசு

லக்கினபாவம்

ஒரு பெண்ணின் ஜன்மலக்கினம் சந்திரலக்கினம் இரண்டும் இரட்டைராசியாகி அதில்செவ்வாய் புதன் குரு சுக்கிரன் இவர்கள் வலிவுள்ளவர்களாக இருந்தால் ஜாதகி நல்ல குணமுள்ளவளும் பதிவிரதையாகவும் சகல விஷயங்களையும் தன் சுயபுத்தியால் தானே கிரகித்து பிரசித்தமுடைய வளாயும்சகலசம்பத்து தனம் ஆபரணம் உடையவளாகவும் தவிர சகல சாஸ்திரங்களையும் கற்றறிந்தவளாகவும் இருப்பாள். ஷ இரண்டு ராசிகளும் ஒற்றை ராசியாட இருந்தால் புருஷ ரூபம் சுபாவமும் பாபியாகவும் கெட்ட நள் வடிக்கை உள்ளவாளகவும் இருப்பாள்ஷ ராசியில் பாபர்கம் பார்வை அடைந்தாலும் ஜாதகி துர்மார்க்கியாகவும் விபசா குணமுள்ளவளாகவும் ஆவாள்

ஷ இரண்டுகளில் ஒன்று ஒற்றை மற்றொன்று இரட்டையாகவும் அல்லது சுப கிரகங்களும் அசுப கிரகங்களும் கலந்து இருந்து சுபர்கள் பார்வை அடையாமல் இருந்தால் ஜாதகியின் குணாதிசயங்கள் நடையுடை பாவனைகள் பலன்கள் கலந்து அதாவது நல்லது கெட்டது (மிஸ்ரசாக) கலந்து இருக்கும் ஜன்ம லக்கினத்தில் புதன் குரு சுக்கிரன் இவர்கள் மூவரும் இந்தாலும் அல்லது இவர்களில் யாராவது ஒருவர் இருந்தாலும் அல்லது பார்த்தாலும் ஜாதகி படிப்பு சர்வ குண முள்ளவளாகவும் பத்திர சம்பத்து முதலிய வைகளுடன் சுகபோகியுள்ள வளாக இருப்பாள்.

லக்கினத்தில் புதனும் சந்திரனும் இருந்தால் ஜாதகி அதிக புத்திசாலியாகவும் தத்துவம் பேசுபவளாகவும் படிப்பு அறிவுள்ளவளாகவும் இருப்பாள் புதனும் சுக்கிரனும் இருந்தால் சங்கீத ஞானமும் அடைந்து இருப்பாள் மேலும் புருஷனும் பிரியமுள்ளவளாக கூடி இருப்பாள் சௌந்தர்ய முள்ள வளாகவும் இருப்பாள் சுக்கிரனும் சந்திரனும் கூடி இருந்தால் அழகு சுகபோகியாகவும் இருப்பாள் ஜன்மலக்கினத் திலும் 2ம் இடத்தில் 3ம் இடத்தில் சுபர்கள் இருந்தால் தனம் சுகம் அழகுள்ளவர்களாகவும் இருப்பாள் ஜன்மலக்கினம் செவ்வாயினுடைய அல்லது சனியினுடைய ராசியாகி அதில் சந்திரனும் சுக்கிரனும் கூடி ஒரு பாபகிரகத்தால் பார்க்கப்பட்டால் தானும் தாயும் விபசாரம் செய்வார்கள்.

ஜன்மலக்கினம் செவ்வாயினுடைய ராசியாகி அதில் சந்திரனும் சுக்கிரனும் கூடியிருந்தால் தன் கணவனை வெறுப்பாள்.

இரண்டாம் பாவம்

ஸ்திரி ஜன்ம லக்கினத்திற்கு இரண்டாம் பாவத்தில் சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்கள் சேர்ந்து இருந்தாலும் அல்லது இவர்களில் யாராவது ஒருவர் இருந்தாலும் அல்லது ஷ ஸ்தானத்தை யாராவது ஒருவர் பார்த்தாலும் தனம் சம்பத்து புத்திரர்களுடன் ஜாதகி சுகத்துடன் குடும்பத்தை நடத்துவாள் ஷ இடத்தில் சனி செவ்வாய் அல்லது ராகு இருந்தாலும் பார்த்தாலும் ஜாதகி தரித்திரம் உள்ளவளாக ஆவாள்.

மூன்றும் பாவம்

ஸ்திரிஜன்ம லக்கினத்துக்கு 3ம் இடத்தில் சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்கள் இருந்தாலும் பார்த்தாலும் அல்லது இவர்களில் யாராவது ஒருவர் இருந்தாலும் பார்த்தாலும் சந்தானம் தனதான்ய விருத்தி ஏற்படும் பாபகிரஹ இருந்தால் பாபம்சம்பவிக்கும். ஜன்ம லக்கினத்துக்கு 3ம் இடத்தில் செவ்வாய் சனி அல்லது ராகு இருக்க மாட்டார்கள்

நான்காம் பாவம்

ஸ்திரி ஜன்ம லக்கினத்துக்கு 4ம் இடத்தில்சூரியன் இருந்தால் அற்பசுகம் செவ்வாய் இருந்தால் தாயாருக்கும் புத்திரருக்கும் தோஷம் சபபவிக்கும் இராகு இருந்தால் சம்பவிக்கும்.

ஐந்தாம் பாவம்

ஸ்திரி ஜன்ம லக்கினத்துக்கு 5ம் இடத்தில் புதன் இருந்தால் புத்திரர்தனம் உண்டாகும் சந்திரன் இருந்தால் பெண் சந்ததி விருத்தி ஆகும் சனி ராகு இருந்தால் மலடி ஆவாள் (தோஷபரிகாரம் செய்யவேணும்)ஜாதகியன் ஜனனசாதகத்தில் ஆண்கிரஹங்கள் குருவினுடைய க்ஷேத்திரம் நவாம்சம் அடைந்து இருந்தால் ஜாதகி புத்திர சம்பத்தும் தனமும் உடையவளாக ஆவாள். ஜாதகியின் ஜன்மலக்கினத்துக்கு 10ம் பாவாதி குரு சுக்கிரனும் இவர்கள் 5ம் இடத்தில் இருந்தால் ஜாதகியின் புருஷன் 100 வயதுடன் ஜீவித்து இருப்பான்.

புத்திர ஸ்தானாதிபன் குரு செவ்வாய் சூரியன் இவர்கள் எவ்விடத்திலாயினும் புருஷ ராசி அல்லது அம்சத்தில் இருந்தால் வெகு புத்திரர்களை ஜாதகி பெறுவாள்

புருஷர்களுக்கு சூரியன் சுக்கிரன் ஆகிய இவர்கள் ஸ்வ க்ஷேத்திரம் ஸ்த நவாம்சம் இவற்றிலும் 6-10, 11-3 இந்த இடங்களிலும் ஸ்திரிகளுக்கு செவ்வாய் சந்திரன் ஆகியவர்கள் ஷ சொல்லிய இடங்களில் இருப்பினும் கர்ப்பம் பிராப்தி உண்டு

சாதகியின் ஜன்ம லக்கினம் ஸ்திர ராசியாகி 5 அல்லது 7ம் பாவத்தில் எத்தனை கிரகங்கள் இருக்கின்றனவோ அத்தனை குழந்தைகளை பெறுவாள் அவைகளில் ஆண் கிரகங்களாகில் ஆண் என்றும் பெண் கிரகங்களாகில் பெண் என்றும் கூறுக

ஸ்திரி ஜன்மலக்கினத்துக்கு 5ம் இடமாகிய புத்திரஸ்தானத்தில் சத்துரு நீசம் பாபகிரஹங்களற்ற கிரஹங்களை கொண்டாவது புத்திரஸ்தானாதிபேரடு கூடியிருக்கும் கிரஹங்கள் மங்கை நீசம் இல்லாமலிருப்பின் அவர்களை கொண்டாவது புத்திர சங்கை சொல்லுக (பலதீபிகை) குருவுக்கும் இலகினத்திற்கும் அல்லது புத்திரஸ்தானத்திலிருக்கும் கிரஹங்களை கொண்டு புத்திரசங்கை சொல்லுக (பலதீபிகை) புத்திரஸ்தானாதி நீச்சசத்துருக்ஷேத்திர பாபம் அடைந்தாலும் 6 8 12ம் இடங்களதிபதிகளுடன் கூடினாலும் புத்திரஸ்தானம் சுப பார்வை பெறுமலிருந்தலுாம் புத்திர நாசம் உண்டாகும் (பலதீபிகை)

# ஆறுவது பாவம்

ஸ்திரி ஜன்ம லக்கினத்துக்கு 6ம் இடத்தில் பாபகிரஹங்களிருந்தால் தனக்கு பிறக்கும் குழந்தைகள் தனக்கு சத்துருவாக ஆவார்கள் 6ம் இடத்தில் சுபகிரஹங்கள் இருக்கலாம்

# ஏழாவது பாவம்

ஸ்திரி ஜன்ம லக்கினத்துக்கு 7ம் இடத்தைக் கொண்டு கணவனுடைய குணாதிசயங்கள் யோகபலம் முதலியன அறி

யவேணும் ஆதலால் 7ம் இடம் சுத்தமாக இருத்தல் நல்லது சுபர்கள் இருக்கலாம் பாபர்கள் இருக்கலாகாது 1) ஸ்திரிக்கு 8ம் இடம் மாங்கல்யதானம் மேலும் 7ம் இடம் சுபக்ஷேத்திரமாகவும் சுப அம்சமாயின் சுப சம்பந்தமிருப்பின் அவளது புருஷன் சௌந்தர்யம் கீர்த்திவித்தை சம்பத்து இவைகளுடையவனாகஇருப்பான் (2) 7ம் இடம் சுபக்ஷேத்திரம் சுபாம்ச-சுபகிரஹங்களின் சேர்க்கை அல்லது பார்வை கூடியதாக இருந்தால் அந்த ஜாதகி அழகு வித்தை கீர்த்தி சம்பத்து இவைகளுடைய புருஷனை பர்த்தாவாக வாய்ப்பாள் (3) 7ம் இடத்தில் புதன் இருக்ககூடாது புருஷன் நபும்சக தன்மை அடைவாள் ஆனால் வித்வானாகவும் தனவானாகரும் நல்ல குணமுள்ளவனாகவும் ஆவான் சனி ராகு இருந்தால் சாதகியின் கேது புருஷன் கிழவனாகவும் தாழ்ந்த புத்தியுள்ளவனாக இருப்பான் ஷ இடத்தில் செவ்வாய் சந்திரன் இருப்பது நன்மை இல்லை 7ல் மூன்று பாபகிரஹங்கள் இருக்கக்கூடாது சுபர்கள் இருக்கலாம் (4) சந்திர லக்கினத்துக்கு 7ல் ஒருசுபகிரஹம் இருந்தால் சாதகி ராஜ்ஜிய பதவியை அடைவாள் (5) ஜன்மலக்கினத்துக்கு 7வது பாவத்தில் செவ்வாய் இரு-ந்து பாபர்களால் பார்க்கப்பட்டால் ஜாதகி சீக்கிரம் விதவை ஆவாள் அல்லது கணவனை வெறுப்பாள் (6) ஜன்ம லக்கினத்துக்கு 7ல் சனி இருந்து ஒரு பாபரால் பார்க்கப்பட்டால் ஜாதகி கிழவியாகவும் விவாகமாகாதவளாகவும் இருப்பாள் (7) 7ம் இடம் பாபக்ஷேத்திரமாகி அதில் சனி இருந்தால் ஜாதகி விதவையாவாள் (8) 7ம் இடத்தில் சனி இருந்தால் ஜாதகியினுடைய புருஷன் கிழவனாகவும் குரூர தன்மையுள்ளவனாகவும் இருப்பான் (9) ஏழாம பாவாதியும் லக்கினாதிபதியும் கூடி ஒரே ராசியில் இருந்தால் ஜாதகியும் அவளுடைய புருஷனும் ஒரே காலத்தில் மரணமடைவார்கள் (10) 7வது பாவத்தில் பாபர்கள் இருந்தால் சாதகி வாலிபத்திலே விதவையாவாள் 8ம் பாவாதி சூரியனுடன் கூடி 7ல் இருந்தால் விதவை தன்மை அடைவாள் 7வது பாவத்தில் செவ்வாய் சனியும் கூடியிருந்தாலும் சாதகி வாலிபத்திலேயே விதவையாவாள் பாபரும் சுபரும் கலந்து இருந்தால் ஜாதகி அன்னிய

33

சம்பந்தமுள்ளவளாக இருப்பாள் (11) 7ம் இடம் க்ரூரக்ஷேத்திரம் அம்சம் பாபர் சேர்க்கை அல்லது பாபர் பார்வை அடைந்தால் அழகில்லாத புருஷனும் மூடதன்மை கபடம் பணம் இல்லாத புருஷனை மணந்து தரித்திர தன்மை ஆவாள் அல்லது இருவருக்கும் கலகம் ஏற்பட்டு பிரிவு உண்டாகும் அல்லது பர்த்துரு நாசம் அல்லது விதவை ஆவாள் (12) 7ல் சூரியன் செவ்வாய் அல்லது செவ்வாய் சனி ஷ்டி நருங்கலாகாது 8ம் பாவத்தில் பாபர்களிருந்து 2ம் பாவத்தில் சுபர்களிருந்து 7ம் இடம் சுக்கிரனுடைய ராசியாகிய ரிஷபம் துலாம் ராசியானால் சாதகி விபசாரம் செய்யும் குணம் உள்ளவளாகி மாங்கல்யத்துடன் இறப்பாள்

# எட்டாவது பாவம்:-

(1) ஸ்திரிக்கு மாங்கல்யஸ்தானம் ஸ்திரி லக்கினத்துக்கு 8ம் இடம் சுத்தமாக இருத்தல் நல்லது. சுபர்களின் சேர்க்கை அல்லது சுபர்களின் பார்வை பெற்றால் பர்த்தாவுக்கு பாரியையாயும் கற்பு யுவதியாயும் நல்லவளாகவும் சுமங்கலியாகவும் ஆவாள், [2] 8ம் இடம் உச்சம் ஆட்சி நட்பு பெற்று லக்கினாதியும் 7ம் அதிபதியும் கேந்திரத்திலிருக்க அவர்களை சுபர்கள் பார்க்க தீர்க்கசுமங்கலியும் தீர்க்காயுசு உள்ள வளாகவும் வாழ்வாள் [3] சுபர்கள் 7 8 9ம் இடத்திலிருக்க 3 11ம் இடத்தை சுபர்கள் பார்க்க தீர்க்காயுசு. (4) 8ம் பாவதியுடன் சனிசேர்ந்து 11ல் இருந்தால் நூறுவயது. (5) 8ம் பாவாதி அஸ்தங்கினாக இருந்தால் அற்பாயுள். (6) 8ம் இடத்தில் சந்திரன் இருந்தாலும் சாதகி விதவையாவாள் மேலும்விதவை என்ற பெயருடன் எங்கும் திரிவாள் (7) சூரியனும் செவ்வாயும் கூடி இருக்ககூடாது எந்தபாவத்திலும் இருந்தாலும் விதவையாவாள் அதிலும் 1 2 4 7 8 9ல் இருக்கக் கூடாது. மற்ற இடங்களாகிய 3 5 6 11 12ம் இடங்களில் இருந்தால் அதிகம் தோஷம் ஏற்படுவதில்லை. சூரியன் மட்டும் இருக்கலாம் [8] 8ம் இடத்தில் சுப கிரஹங்கள் இருப்பது நல்லது சுமங்கலியாகமறிப்பாள் [9] 8ம் இடம் 4ம் இடத்தில் பாபகிரஹங்கள் இருந்தால் ஜாதகி தரித்திரமுள்ளவளாகவும் துக்கமுள்ள வளாகவும் இருப்பாள்.

## ஒன்பதாவது பாவம்:-

(1) ஜன்ம லக்கினத்துக்கு 9ல் சூரியன் அல்லது செவ்வாய் அல்லது புதன் அல்லது குரு அல்லது சுக்கிரன் இருந்தால் ஜாதகி சுகம தனம் உள்ளவாளக இருப்பாள். [2] 9ம் பாவாதியும் குருவும் சேர்ந்து கேந்திரம் திருகோணங்களிலிருந்தாலும் அல்லது 4வது பாவாதியுடன் அல்லது புதனுடன் சேர்ந்து இந்தாலும் ஜாதகியினுடையபுருஷன் தீர்க்காயுடன் தனம் தான்யர் வித்தை இவைகளை உடையவனுக ஆவான். மேலும் 8 வது பாவாதியுடன் சேர்ந்து இருந்தாலும் தீர்க்காயுள்ளவனுக இருப்பான். (3) ஜன்மலக்கினத்துக்கு 9ம் பாவாதி சுக்கிரனுகி 9ல் இருந்தும் 9ம் பாவாதி 11ல இருந்தாலும் ஜாதகி தன் தகப்பன் சொத்து தனக்கு வந்து சேரும், (4) 9ம் பாவாதி, 6 8 12ம் இடத்தில் இருந்தால் ஜாதகி விதவையாவாள். சூரியன் 9வது பாவாதியுடன் கூடி 7ல் இருந்தாலும் விதவைய ாவாள். (5) 9ம் இடத்தில் சூரியனும் செவ் வாயும் இருந்தால் புத்திரர்களுக்கும் தனக்கும் தோஷம் (6) 9ம் இடத்தில் சுபகிரஹங்களும் இருந்து 7ம் இடம் 8ம் இடம் இவ்விடங்களில் பாப கிரஹங்மளிருந்தாலும் கூட சாதகி அநேக புத்திரர்களை பெற்று சுகமாக புருஷனும் தானும் அநேககாலம் ஜீவித்து இருப்பார்கள்.

## பத்தாவது பாவம்:-

ஜன்ம லக்கினத்துக்கு பத்தாவது இடத்தில் சந்திரன் செவ்வாய் குரு சேர்ந்து இருந்தாலும் அல்லதுயாராவது ஒருவர் மட்டும் இருந்தாலும் ஜாதகிக்குதனம் புத்திரர் உண்டாகும் விருத்திக்கும் இராகு இருந்தால்படிப்பு ஏற்படும்.

## பதினோராவது பாவம்:-

ஜன்ம லக்கினத்துக்கு 11ம் இடத்தில் (லாபத்தில்) செவ்வாய் புதன் குரு சுக்கிரன் சேர்ந்து இருந்தாலும் ஜாதகிக்கு ஆயுள் செல்வம் ஏற்படும்.

# பனிரெண்டாவது பாவம் -

ஜன்ம லக்கினத்துக்கு 12-ம் இடமாகில் இராகு கேது இருக்க கூடாது விபசார தன்மை ஏற்படும், ஆனால் புதன் இருந்தால் அநேக புத்திரர்கள் ஏற்படும். குரு சுக்கிரன் இருந்தால் தனம் பாக்கியம் ஏற்படும்

குறிப்பு:- இதுவரையில் ஸ்திரிக்குள்ள சாதகப்படி 12 பாவ பலன்களை சொல்லப்பட்டது திசாபுத்திர பலன்கள் ஆண் சாதகத்துக்கு ஏற்பட்ட பலன்களே இவர்களுக்கும் சொல்லப் படுகிறது.

விவாஹ காலத்தில் ஜோடி சேர்ப்பதில் ஆண் பெண் இரு சாதகங்களில் முக்கியமாக மேலே சொல்லப்பட்ட 12-பாவங்களில் பலன் 7-ம் இடம் 8-ம் இடம் முக்கியமாக கவனிக்கவேண்டும் என்று இருந்தபோதிலும் ஷ இரண்டு இடங்களில் சுப கிரக சேர்க்கை சுப திருஷ்டியுள்ள சாதங்களாக பார்த்து விவாஹம் செய்யவும் அப்படியில் லாமல் ஆண்பெண் இருசாதகங்களில் ஷ இரண்டு ஸ்தானங் களில் பாப கிரகங்களாகிய சனி இராகு அல்லது செவ்வாய் கூடியும் அல்லது தனித்தும் இருக்கில் ஷ இருசாதகமும் சம பாப திருஷ்டி அடைந்து சுப பார்வை அடைந்தும் மற்ற பாவங்கள் நன்றாக இருந்தால் ஜோடி சேர்த்து விவாஹம் செய்து விடலாம் என்பது என் கருத்து யற்ற போகபலன் ஆயுள் பலம் இருந்தால் சுபத்தை தரும்.

# விவாஹ விக்கினம் அதற்கு பரிகாரமும்

ஸ்திரி புருஷ ஜாதகங்களில் ஜன்ம லக்கினத்திற்கு 3-7-9 இந்த இடங்களில் பாப கிரகங்களாகிய செவ்வாய்-சனி-இராகு-கேது (சூரியன் தவிர) இவர்களிருந்தால் ஷ சாதகர் களுக்கு விவாஹ தடைபட்டே அதாவது தக்கவயது கடந்து நடக்கும் மேலும் ஷ ஸ்தானங்களில் பாப கிரஹங்களிருந்து அக்காலம் லக்கினத்திற்கு 6-8-12 வது ஆதிபத்தியம்

அடைந்தால் அத்திசை புத்தி காலங்களில் விவாஹமானது தாமதமாகவே கடந்து நடக்கும் அல்லது பல தடங்கல்களுடன் முடிவு அடைந்து விடும்.

இதற்கு பரிகாரம்.

ஒரு வெள்ளிக்கிழமை நல்ல நாளாகப்பார்த்து மஹாலக்ஷிமி அல்லது கௌரி விக்கிரஹம் அல்லது படத்துக்கு மஞ்சள் நீர் பால் அபிஷேகம் பூஜை செய்து பரமான்னம் [பொங்கல்] விளக்கேற்றி நைவேத்தியம் வைத்து பிறகு ஓர் சுமங்கலியை வரவைத்து அவளுக்கு ஸ்நானதிகள் செய்வித்து ஷை பரமான்னம் (பொங்கல்) புசிக்கசெய்து ஓர் வஸ்திரம் தானம் கொடுத்து திருப்தி படுத்தி அவளிடம் அக்ஷதை ஆசீர்வாதம் பெற்றால் சீக்கிரம் விவாஹபிராப்தி ஏற்படும். தவிர இந்த புஸ்தகத்தில் முன்பக்கம் சொல்லியிருக்கிறபடி விநாயக ஸ்தோத்திரம் லக்ஷிமி ஸ்தோத்திரமும், பாராயணம் செய்துவரில் சர்வகாரியம் ஜயமும் விவாஹ ] பிராப்தியும் உண்டாகும்,

# விவாஹ காலம்

(1) ஜன்ம லக்கினத்திற்கு சப்தமாதி [7-க்குடையவன் ) அல்லது சுக்கிரன் இவர்கள் லக்கினாதி இருக்கும் ராசியில் அல்லது திருகோண ராசிகளில் வரும் போது குரு பலவானாக இருக்கும் போதும் விவாஹ பிராப்தி யுண்டாகும்,

[2] களத்திர ஸ்தானத்தில் [7-ம் இடத்தில்] இருப்பவர் அல்லது அந்த ஸ்தானாதி யிருக்கும் ராசினாதனுடைய திசை புத்தி காலங்களில்] அல்லது கோசாரரீதியாக லக்கினாதி களத்திரஸ் தானத்திற்கு வரும் போது விவாஹம் ஏற்படும் மேலும் ஜன்ம ராசியை குரு பார்த்தாலும் விவாஹ காலம் ஏற்படும்.

சுபம் !

நந்திதேவர் அருளிய சோதிட மர்மம்

மூன்றாம் பாகம் முற்றிற்று

சீனிவாச அச்சகம். சூளை, சென்னை-112

மாதம் ஒன்றில் மற்றொருவர் உதவியின்றி மனோ தைரியத்துடன் சோதிடம் சொல்லக்கற்றுக் கொள்ளும் நூல் ஜாதக கணிதாரம்பமெனும்

# சோதிட ஆசான்

பிரபல ஜோதிட வித்வான்கள் பத்திராதிபர்கள் நற்சாட்சி பெற்ற நூல்

ஒவ்வொருவரின் கோச்சார விதிகளும் கிரகராசிகளு நக்ஷத்திர பலன்களும் கிரகசாரங்களும் சண்டாதி கண்டங்களை பிறர் உதவியின்றி அறிந்துகொள்ளும் முறையும் விவாக பொருத்த நிமித்தங்களும் புத்திர சந்தானத்திற்கு கந்தப் பொருத்தங்களும் அந்தரங்களின் அரிய விஷயங்களும் மற்றும் பொருத்தமுள்ள பலவித சோதிடமர்ம விஷயங்களெல்லாம் இதில் அடங்கியுள்ளது இது ஒன்று இருந்தால் வேறு சோதிடப் புத்தகங்கள் தேவையில்லை.

4-பாகங்கள் அடங்கியது இதன் விலை ரூ. 60.

# மணிகண்ட கேரளசோதிடம்

ஆதியில் ஓதிவந்த அகஸ்திய மாமுனிவர் அருளிச்செய்த கேரள ஜோதிடத்தை இது வரையிலும் மூலமாக இந்ததை நித்தியானந்த ஜோதிடர் அவர்களால் நூதனமாக உரையும் லக்கினத்திற்குறியசக்கரமும் வெகு விமரிசையாய் தெளிவாக பதிப்பித்துள்ளோம் இது ஜோதிடர்களுக்கு இன்றியமையாத நூல் இதனில் அரிஷ்ட காண்டம் நலன் தீங்கு காண்டம் அர்பாயுசு காண்டம் யோக காண்டம் பலாபல காண்டம் தீர்க்காயுள் காண்டம் பிரதியோக காண்டம் ஆயுள் காண்டம் பிரதி அரிஷ்ட காண்டம் தனக்காண்டம் ரோக காண்டம் புத்திர காண்டம் சகோதர காண்டம் மாதுர் காண்டம் பிதுர் காண்டம் களத்திர காண்டம் திருஷ்டி பலகாண்டம் திசை சக்கர காண்டம் திசை பொசிப்பு மாரக காண்டம் முதலிய இத்தியாதி காண்டங்களுக்கு சக்கரங்களுடன் மிக தெளிவான உரை எழுதப்பட்டு நல்ல தாளில் அச்சிட்டு இருக்கிறது விலை ரூ. 25

சண்முகானந்தா புக்டிப்போ, சூளை, சென்னை-112.

## மனையடி சாஸ்திரம் என்னும் மனைவிதி விளக்கம்

இந்நூல் கொல்லத்து மேஸ்திரிகளுக்கும். ஏனையோர்களுக்கும் உபயோகமானது இதில் வாஸ்து. லட்சணம் வாஸ்து நிதானம். அஷ்டதிக்கு லட்சணம்மனைதோஷங்களறிய கிரகப் பிரவேச விதிகள் மனை முகூர்த்தம். வீடு கட்ட வேண்டிய நிர்ணயம் தெரு வாசக்கால் வைக்க வேண்டிய விதி கிணறு தேவாலய சிற்பம் கெற்பக் கிரகத்தின் விபரம் முதலானவைகள் அடங்கியிருக்கின்றன. விலை ரூ. 6

## ஆருட கொத்து

அனேக ஏட்டுப் பிரதிகளை ஆராய்ந்து அவற்றில் சிறந்த முக்கியமான ஐந்து ஆருடங்களை சரியெனதீர்மானித்துமுன்னோராலெழுதிய ஏட்டுப் பிரதியாயிருந்ததைக் தற்கால மனித வகுப்பினரால் விருப்பத்திற்கு இணங்க புதிதாக அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோம் இதில் வால்மீகர் புஷ்ப ஆருடம் நவக்கிரக ஆருட சிந்தாமணி அகஸ்தியர் ஆருடம் முதலிய ஐந்து ஆருடங்களும் அடங்கியிருக்கின்றன ஆருடம் அறிய விரும்புவோர்க்கும் சோதிடர்களுக்கும் இன்றியமையாத நூல். விலை ரூ 30

## ஆதி ஸாமுத்திரிகம் என்னும் அவயவலக்ஷண சாஸ்திரம்

அருமையான இச்சாஸ்திரத்தின் கருத்தை ஸமஸ்கிருத பாஷையிலிருந்து சுலோகத்துக்குத் தக்க தமிழ் அர்த்தமாக இச்சாஸ்திரத்தை அச்சிடப்பட்டிருக்கிறது இச்சாஸ்திரத்தை பார்த்தவுடனே தன் ஜீவ திசை மரணகாலம். லாபம் நஷ்டம். சுகம். துக்கம் இவை முதலான எல்லா பாக்கியமும் தெரிந்து கொள்ளுவதற்கு இது ஆதாரம் என்பதில் சந்தேகம் வேண்டாம். நீங்கள் ஒருவரை பார்த்த மாத்திரத்தில் அவருடைய குணங்களையும், அவரின் நடையால் இவர் இத்தகையர் என்றும் அன்னாரின் குரலால் இவர் குணம் இம்மாதிரியது என்று உரைக்க விரும்புகிறீர்களா? இன்றே இந்நூலை வாங்குங்கள். விலை ரூ. 12

---

சண்முகானந்தா புக் டிப்போ, சூளை, சென்னை-112.

குரு-சிஷ்ய சம்பாஷணை என்னும்

# ஹஸ்த ரேகை

## சாஸ்திரம்



தற்காலம் எத்தனையோ ரேகை சாஸ்திரங்கள் வெளி வந்திருக்கலாம் ஆனால் அதுபோல இல்லாமல் இதனில் சிஷ்யன் முக்கியமான கேள்வி கேட்பதையும் குரு சொல்வதும் வெகு விமரிசையாகயிருக்கிறது தானே புத்தகத்தை வைத்து பார்த்தும் கொள்ளலாம் பிறருக்கும் சொல்லலாம் வெகு எளிய நடையிலும் ஏராளமான படங்களுடன் தெளிவாகவும் சுலபமாகவும் மேனாட்டு அறிஞர்கள் பிரபல மேதாவிகள் படங்களுடன் வெளி வந்து விட்டது சுமார் 400 படங்களுடன் அடங்கியது. பெரிய மேதாவியும் கை ரேகை அனுபவம் வாய்ந்த நிபுணருமான K. S. சிவசுப்பிரமணியம் அவர்களால் இயற்றப் பட்டது

இதன் விலை ரூ 30

---

கிடைக்குமிடம் :

சண்முகானந்தா புக் டிபோ,

67, முதலி தெருவு, சூளை, சென்னை-112